# கல்கி

டெஜா : 60 லட்சம்
த்ராவிட் : 1 கோடி
கங்குலி : 1 கோடி
டெண்டுல்கர் : 3½ கோடி
— விவரம் உள்ளே...

KALKI
5.10.97
ரூ. 4.00

சென்னைக் குடிநீர்:

## கை கொடுக்குமா கிருஷ்ணா?

—நேரடி ரிப்போர்ட்

# வாழ்க்கைச் சவாலை வென்று காட்டுகிறார்கள்...

மதுரையில் ஆயிரக்கணக்கான ஆட்டோக்கள் ஓடினாலும் அதில் மூன்று ஆட்டோக்கள் மட்டும் பார்ப்போரின் புருவங்களை உயரச் செய்யும். காரணம் - அந்த மூன்று ஆட்டோக்களையும் ஓட்டுபவர்கள் மூன்று இளம் பெண்கள். இவர்கள் மூவருமே குடும்பத்தின் கோரங்களால் பாதிக்கப்பட்டவர்கள். சிவகங்கையிலிருந்து செல்வியும், ஆண்டிப்பட்டியிலிருந்து ஈஸ்வரியும், சென்னையிலிருந்து புவனாவும் மதுரைக்கு ஓடி வந்தவர்கள். நழுவிப் போகவிருந்த வாழ்க்கையை மதுரையிலுள்ள "நண்பன்" என்கிற சமூக சேவை அமைப்பின் மூலமாக மீண்டும் இறுகப் பற்றியிருக்கின்றனர்.

"ஓர் ஆட்டோ டிரைவரால் (கணவனால்) நானும் என் இரண்டு குழந்தைகளும் நடுத் தெருவுக்கு வந்தோம். இப்போது அதே




• புவனா



• கராத்தே பயிற்சி...

**பெண்கள் ஆட்டோ ஓட்டுவது புதிதல்ல; ஆனால் மதுரையில் ஓட்டும் இவர்கள் வித்தியாசமானவர்கள்...**

ஆட்டோ தொழில் மூலம் என் பிள்ளைகளை நல்ல நிலைக்குக் கொண்டு வர போராடிக்கிட்டிருக்கேன். நிச்சயம் வெற்றி பெறுவேன்'' என்று தன்னம்பிக்கையோடு கூறுகிறார் புவனா.

ஆண்டிப்பட்டியிலிருந்து தற்கொலை நோக்கத்துடன் மதுரை வந்து சில நல்லவர்களின் வழிகாட்டுதலால் நண்பனுக்கு வந்து சேர்ந்ததாகக் கூறும் ஈஸ்வரி, "There is hope; You are not alone' என்ற நண்பனின் தாரக மந்திரம் முழுக்க முழுக்க உண்மை. நான் தனியே இல்லை. இதோ 44 பேர் அடங்கிய பெரிய குடும்பத்தில் நானும் ஒருத்தி. வாழ்வே வேண்டாம் என்றிருந்த எனக்கு இப்ப வாழும் ஆசை நிறையவே இருக்கு!'' என்கிறார்.

காலையிலும், மாலையிலும் பள்ளிக்கூடங்களுக்குக் குழந்தைகளை ஏற்றிச் செல்கிறார்கள். மீதி நேரங்களில் மதுரை மருத்துவ கல்லூரிக்கு எதிரேயுள்ள 'மகளிர் ஆட்டோ நிலைய'த்தில் காத்திருந்து சவாரி பிடிக்கிறார்கள். "கார்ப்பரேஷன் எங்களுக்கு ஒதுக்கியிருக்கும் இந்த இடம் அதிக ஆள் நடமாட்டமில்லாத இடம். இந்தப் பக்கம் கொஞ்சம் தள்ளிக் கொடுத்திருந்தால் ஜி.ஹெச்! நிறைய சவாரி கிடைக்கும். அந்தப் பக்கம் கொஞ்சம் தள்ளி இடம் கொடுத்திருந்தால் அண்ணா பஸ் ஸ்டாண்ட். சவாரிக்கு கேக்கவே வேணாம். இப்படி ரெண்டுக்கும் நடுவிலே போட்டுட்டதால் சவாரி கிடைப்பது கொஞ்சம் கஷ்டமாயிருக்கு. கார்ப்பரேஷன் பார்த்து இதைவிட நல்ல இடத்தில் ஸ்டாண்ட்டுக்கு அனுமதி கொடுத்தால் சந்தோஷமாயிருக்கும்'' என்று கூறும் இவர்களுக்கு தற்போது சராசரியாய் ஒரு நாளைக்கு இருநூறு ரூபாய்க்கு சவாரி கிடைக்கிறதாம்.

"இந்த மூன்று பேர் ஓர் ஆரம்பம்தான். இன்னும் பல பெண்களை இந்தத் தொழிலில் விரைவில் ஈடுபடுத்தவுள்ளோம். சமூகத்தில் எந்த ஆபத்தையும் சந்திக்கும் தைரியம் பெண்களுக்கு இருக்க வேண்டும் என்பதே எங்கள் எண்ணம். அதனால் தான் இவர்களின் தற்காப்புக்காக இம் மூவருக்கும் கராத்தே, வர்மக்கலை போன்ற தற்காப்புக் கலைகளிலும் பயிற்சி தரப்படுகிறது!'' என்று கூறுகிறார் 'நண்பன்' அமைப்பின் நிறுவனரும் இயக்குனருமான சகோதரர் ஜேம்ஸ்.

— கிரண் நியூஸ்

## சுதந்திரம் ஊறிய நாடகத் தந்திரம்!

குஜாராத்தி நாடகம் - 'ஜபக் ஜோத்'. 1930 ஆம் ஆண்டு மேடை கண்டது. மகன் இந்திய தேசியக் கொடியை ஏற்ற வேண்டும் என்று புறப்படுகிறான். அப்பா, பிரிட்டிஷாரின் அடிவருடி. அவர்களிடமிருந்து 'ஸர்' பட்டம் பெற்றவர். தன்னைத் தடுக்கும் பெற்றோரிடம் 'அப்பா, எனக்கு உங்களை விட தேசப் பிதா காந்திஜிதான் பெரியவர்; அம்மா, உங்களை விட பாரத மாதாதான் பெரியவள். அவர்களுக்குச் சேவை செய்ய நான் புறப்படுகிறேன். என்னைத் தடுக்காதீர்கள்' என்று கூறிவிட்டு பெற்றோரின் தடையையும் மீறிச் செல்கிறான். பொது இடத்தில் இந்தியக் கொடியை ஏற்றுகிறான். பாதி ஏற்றிக் கொண்டிருக்கும் போதே போலீஸாரின் தடியடித் தாக்குதலுக்கு இலக்காகிறான்.

அப்போது பாசம் உந்தித் தள்ள, அவனைக் காப்பாற்றுவதற்காக ஓடோடி வருகிறார் அப்பா. அவரைப் பார்த்து மகன் கெஞ்சுகிறான்: 'அப்பா, நான் கொடியை பாதிக் கம்பம் ஏற்றி விட்டேன். நீங்கள் அதை முழுவதுமாக ஏற்றி பட்டொளி வீசிப் பறக்கச் செய்யுங்கள்!' அப்பாவின் உள்ளத்தில் மகனின் இந்த வார்த்தைகள் தேசியக் கனலை ஊதிவிட்டது. மகனுடைய பணியைத் தொடர்ந்தார். அதைக் கண்டு ஆனந்தித்த மகன், தன் இறுதி மூச்சை நீத்தான். ஆனால் அப்பா கொடியேற்றி அது கம்பத்தின் உச்சியில் பறந்தபோது இவருக்கும் தடியடி, தண்டனை. மகனுடைய தாகத்தைத் தீர்த்த நிறைவில் கொடியைச் சுதந்தரக் காற்று வருடிச் செல்லும் அழகைக் கண்டவாறு தானும் உயிர் துறக்கிறார் அப்பா.

● மராத்தியில் ஆத்ரேயின் 'மீ உபாய்' ஒரு நகைச்சுவை நாடகம். பிரிட்டிஷ் அரசில் பணியாற்றிய இந்திய அதிகாரிகளைக் கிண்டல் செய்யும் கதை. இந்த நாடகத்தைப் பார்த்து, பல இந்தியர்கள் ஆங்கிலேயப் பதவி சுகத்தைத் துறந்து, இந்திய விடுதலைக்காகத் தம் உடல், பொருள்,

குடும்பம், ஆவி என அனைத்தையும் தியாகம் செய்திருக்கிறார்கள்.

● ஆந்திரத்து அல்லூரி சீதாராம ராஜு, வன்முறையால்தான் இந்தியாவை அந்நியரிடமிருந்து மீட்க முடியும் என்று நம்பியவர்.

ஒரு மிளகாயைத் தன் இலைச்சினையாக வரைந்து கடிதம் எழுதுவார். யாருக்கு? போலீஸ் அதிகாரிகளுக்கு. இன்று இந்தக் காவல் நிலையத்தைக் கொள்ளையடிக்கப் போகிறேன்' என்று மிளகாய்க் கடிதம் மூலமாக அறிவித்துவிட்டு, அதே போல செய்வார். இவருக்குப் பயந்து கொண்டு காவல் நிலையத்திலிருந்து அதிகாரிகள், காவலர்கள் எல்லோரும் ஓடிவிடுவார்கள். இவர் போய் அங்கிருக்கும் ஆயுதங்களை எடுத்துக் கொள்வதோடு, இன்னின்ன ஆயுதம், இத்தனை எண்ணிக் கையில் எடுத்துப் போகிறேன் என்று எழுதி வைத்துவிடுவார். ஒன்றுமே செய்ய முடியவில்லை. இவர் தன்னையும் சுற்றுச் சூழலையும் சுத்தமாக மறந்த தியான நிலையில் தினமும் சூரிய நமஸ்காரம் செய்யும் பழக்கம் உள்ளவர் என்பதைத் தெரிந்து கொண்ட ஆங்கிலேயர்கள், அந்தச் சமயம் பார்த்து அவரைச் சுட்டுக் கொன்று விடுகிறார்கள். வன்முறையை அடியோடு வெறுத்த காந்திஜி கூட அல்லூரி சீதாராமராஜுவுக்கு எழுத்து மூலம் அஞ்சலி செலுத்தியிருக்கிறார். இவருடைய கதையும் நாடகமாக்கப்பட்டிருக்கிறது.

● வங்காளத்தில் 1860 ம் ஆண்டு வாக்கில் 'நீலதர்பன்' என்ற நாடகம் நடத்தப்பட்டது. ஆங்கிலேய ஆட்சியாளர்களின் கொடுமைக்கு அஞ்சி வீட்டுக்குள்ளேயே நடத்தப்பட்ட நாடகம். அடிமைகள் அவலமாக நடத்தப்படும் கொடுமையும், அதற்கு அஹிம்ஸா முறையிலேயே எதிர்ப்புத் தெரிவிக்கும் போக்கும் நாடகத்தின் கதை. 'திருப்பித் தாக்காதே, வன்முறையைக் கையாளாதே. அப்படிக் கையாண்டால் உனக்கும் அந்தக் காட்டுமிராண்டிகளுக்கும் வித்தியாசம் இல்லாமல் போய்விடும்' என்ற உபதேசம்தான் நாடகத்தின் பலம்.

— இப்படி இந்திய சுதந்தரப் போராட்டத்தின் தீவிரத்தை நாட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் பரப்பிய பல சாதனங்களில் மேடை நாடகமும் ஒன்று. இந்திய சுதந்தரம் என்ற ஒரே உணர்வில் இந்தியர் பூராவும் அந்தந்த மாநில மொழிகளில் அன்று நடத்தப்பட்ட பல நாடகங்கள் ஆங்கிலேய அரசால் தடை செய்யப்பட்டதும், நாடகக் கலைஞர்கள் துன்புறுத்தப்பட்டதும், படுகொலை செய்யப்பட்டதும் இந்திய சுதந்தர வரலாற்றில் குறிப்பிடத்தக்க சோக நிகழ்ச்சிகள்.



* மராத்தி நாடகப் படப்பிடிப்பின்போது....

நமது சுதந்தரப் பொன்விழாவை முன்னிட்டு தமிழ் உள்பட இப்படிப்பட்ட பல நாடகங்களையும் இப்போதைய நடிகர்களைக் கொண்டு நடிக்கச் செய்து, அன்றைய சுதந்தரப் போராட்ட உணர்வுகளை 'டாகுமென்டரி' படமாக தொலைக்காட்சித் தொடராகத் தயாரித்திருக்கிறார், என்.கே. விஷ்ன் கிருஷ்ணசாமி. "அந்த மாநில நாடகங்கள் அந்தந்த மாநில மொழிகளிலேயே படமாக்கப்பட்டுள்ளன. அதை மற்ற மாநில மக்கள் புரிந்து கொள்ள வேண்டாமா? வேண்டும். அதற்காகத்தான் அந்தந்த மாநில மொழிகளில் சப்டைட்டில்கள் போடப் போகிறோம்!" என்கிறார் தயாரிப்பாளர்.

— பிரபுசங்கர்

### இவர்களுக்கு

# அறுபது லட்சம்; ஒரு கோடி; மூன்றரை கோடி!

ஜடேஜா- அறுபது லட்சம், ராகுல் டிராவிடும், கங்குலியும் - தலா ஒரு கோடி. சச்சின் டெண்டுல்கர்- மூன்றரைக் கோடி! இவையெல்லாம் இவர்களது ஆண்டு வருமானம். ஆனாலும் இதெல்லாம் பந்தயங்களில் விளையாடி சம்பாதிக்கும் தொகை அல்ல. தங்களது கிரிக்கெட் புகழின் அடிப்படையில், பல்வேறு விளம்பரங்களில் தோன்றுவதன் மூலம் அவர்களுக்குக் கிடைக்கும் வருட வருமானம் இது.

"அப்படியா?" என்று நீங்கள் ஆச்சரியப்படலாம். அல்லது "எப்படியோ சம்பாதிக்கட்டுமே" என்று எண்ணுபவராகவும் இருக்கலாம்.

• சச்சின் டெண்டுல்கர்



• ராகுல் டிராவிட்

எப்படியிருந்தாலும் கிரிக்கெட் ஹீரோக்களுக்கும் விளம்பர உலகத்துக்கும் இடையே உருவாகி வரும் விசித்திரமான தொடர்புகள் சுவாரசியமானது. இடைத் தரகர்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாக வளர்ந்து வருகிறது.

உதாரணத்துக்கு மார்க் மஸ்கரேன்ஹஸ் என்பவரை எடுத்துக் கொள்ளுங்கள். 1995ல் சச்சினுடன் இவர் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார். தாம் குறிப்பிடும் விளம்பரங்களில் மட்டுமே ஐந்து வருடங்களுக்கு சச்சின் தோன்ற வேண்டும்

என்றது அந்த ஒப்பந்தம். இதற்கு ஈடாக அவர் சச்சினுக்கு 3.6 கோடி ரூபாய் கொடுத்துவிடவேண்டும்!

மஸ்கரேனின் எண்ணவோட்டம் இதுவாகத்தான் இருந்திருக்க வேண்டும். 'விரைவில் உலகக் கோப்பை நடக்கவிருந்த காலம் அது. கோப்பையை இந்தியா தட்டிச் செல்ல பிரகாசமான வாய்ப்பு உண்டு. சர்வதேச அளவில் சச்சின் ஒரு பிரபலமான முகம்; நம்பிக்கை நட்சத்திரம். இந்த நிலையில் தங்கள் விளம்பரங்களில் சச்சினை இடம் பெற வைக்க பிரபல நிறுவனங்கள் போட்டியிடும். இவையெல்லாம் ஒப்பந்தப்படி தன் மூலம் மட்டுமே நடைபெறும். விளம்பரக் கட்டணத்தை நம் இஷ்டத்துக்கு உயர்த்தினால சச்சினுக்கு கொடுக்க வேண்டிய ஒப்பந்தத் தொகை போக ஏராளமான கொழுத்த லாபம் சம்பாதிக்கலாம்.'

தொடக்கத்தில் அவர் நினைத்ததெல்லாம் நடக்கத் தொடங்கின. பிலிப்ஸ், விசா இன்டர்நேஷனல், எம்.ஆர்.எப். ஆகிய ஜாம்பவான் நிறுவனங்கள் சச்சினைத் தங்களது விளம்பர மாடலாகத் தேர்ந்தெடுத்தன.

ஆனால் விளம்பர வாய்ப்புகள் நினைத்த அளவுக்கு குவிந்ததாகத் தெரியவில்லை. இந்திய கிரிக்கெட் அணி மாறி மாறி தோல்வியைச் சந்திக்க, அணித் தலைவர் சச்சினின் இமேஜும் அடிவாங்கியிருக்கிறது. இந்த நிலையில் "என் வெற்றிக்குக் காரணம் நான் இதைப் பயன்படுத்துவதுதான்" என்று தங்கள் பொருளை சச்சின் சிபாரிசு செய்தால், பார்ப்பவர்கள் கொஞ்சம் கிண்டலாக புன்னகைப்பார்களே தவிர தங்கள் தயாரிப்பை வாங்குவார்களா? இப்படி ஒரு சந்தேகம் பிரபல நிறுவனங்களுக்கு



• அஜேய் ஜடேஜா

எழுந்தது. தென் ஆப்ரிக்கா, மேற்கிந்திய தீவுகள், ஸ்ரீலங்கா இத்தனை அணிகளுடனும் தோல்வி. போதாக்குறைக்கு இந்தியாவிலேயே நடைபெற்ற சுதந்தர தின கோப்பை பந்தயத்தில் கூட இந்தியாவால் இறுதிச் சுற்றை எட்ட முடியவில்லை. எனவே சச்சினுக்கு மிக அதிகமான மாடலிங் தொகையை அளிப்பதில் தயக்கம்!

இந்த நிலையில்தான் சஹாரா கோப்பையை நமது ஆட்கள் தட்டிக் கொண்டு வந்திருக்கிறார்கள். இது, பயந்து கொண்டிருந்த விளம்பர இடைத்தரகர்களுக்குக் கொஞ்சம் ஆறுதல் அளித்திருக்கிறது.

— குல்லூ

• கங்குலி

வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி கொள்ள, திருமதி. பானு

# வட்டிக் கடைக்கு போகவில்லை!

**மா**றாக ஸ்ரீராம் சிட்ஸில் தான் சேர்ந்திருந்த சீட்டை தள்ளி எடுத்து, தன் குடும்பத்திற்கு தேவையான கிரைண்டர், மிக்ஸி கலர் டி.வி. போன்ற அத்தியாவசிய பொருட்கள் வாங்கி தன் குடும்பத்தின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொண்டு வருகிறார். அனேகர் உயர காரணமான ஸ்ரீராம் சிட்ஸையே, தனக்கும் ஏணியாக அவர் தெரிந்து கொண்டு, தொடர்ந்து சீட்டுகள் கட்டி வருகிறார். ஸ்ரீராம் சிட்ஸில் பயன்பெற்ற 7 இலட்சம் சந்தாதாரருள் இவரும் ஒருவர். ஏன், நீங்களும்தான். நீங்கள் பெற்ற அந்த நன்மைகளை மற்றவரோடும் பகிர்ந்து கொள்ளுங்கள்.

ஸ்ரீராம் சிட்ஸின் சந்தாதாரர் என்கிற முறையில், இவ்விழாக் காலத்தில், நண்பர், உறவினர் மற்றும் சக அலுவலருக்கு ஸ்ரீராம் சிட்ஸின் பாரம்பரியப் பாதையை அறிமுகம் செய்யுங்கள். திருமணம், கல்வி, மருத்துவம் அல்லது தொழிலுக்கு என ஸ்ரீராம் சிட்ஸ் உங்களுக்கு உதவியதை அவர்களிடத்தில் எடுத்துரையுங்கள். வாகன நிதியுதவி, மியூச்சுவல் ஃபண்ட், மருந்து, பெட் பாட்டில்கள், சரக்கு போக்குவரத்து, தொழில் மற்றும் ஏற்றுமதித் துறைகளில் தனியிடம் பிடித்த ஸ்ரீராம் குழுமத்தின் முன்னோடி நிறுவனமான ஸ்ரீராம் சிட்ஸின் 14 இலட்ச சந்தோஷ வட்டத்தில் அவரையும் சந்தாதாரராய் இணைத்திடுங்கள்.



புதிய சந்தாதாரரை நீங்கள் அறிமுகம் செய்யும் போது மூன்று வர்ணங்கள் அல்லது அசோக சக்கரம் தாங்கிய பரிசுக் கூப்பனை பெறுவீர்கள். SS பௌல் முதல் தங்க நெக்லஸ் வரையிலான பரிசுகளை இக்கூப்பன்கள் உங்களுக்கு பெற்றுத்தரும். நீங்கள் அறிமுகம் செய்யும் நண்பருக்கும் அழகான சந்தாதாரர் பரிசுகள் காத்திருக்கிறது.

ஆண்டு வர்த்தகம் ரூ.1000 கோடியை அடைந்ததன் பொருட்டு, புதிய சீட்டு சேரும் சந்தாதாரர் அனைவருக்கும் ஓர் அழகிய பரிசு உண்டு!

*நேரடியாய்ச் சேரும் சந்தாதாரர்களுக்கும் பரிசு உண்டு. பரிசுகளைப் பெற்று பொன்னான நேச இழைகளை நெருக்கமாய் நெய்வோம் வாருங்கள்.*



# ஸ்ரீராம் சிட்ஸ்

ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்
ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்
'சுப்ரமணியன் பில்டிங்', 1. கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.

இழப்பற்ற, அதிக லாபம் தரும், என்றும் ஏற்புடைய முதலீடு.

| | சீட்டுத் தொகை | | சந்தாதாரர் பரிசுகள் |
|---|---|---|---|
| 1. | 250 x 40 | 10,000 | SS பௌல் (மூடியுடன்) |
| 2. | 500 x 30 | 15,000 | செல்லோ கிப்பிங் கேஸ் |
| 3. | 625 x 40 | 25,000 | கும்பகோணம் SS கீபாஸ்பானி கன்டெய்னர் |
| 4. | 500 x 60 | 30,000 | SS உருளி செட் (இரண்டு) |
| 5. | 1000 x 50 | 50,000 | SS CB மப் கீப்பரை போல் |
| 6. | 2500 x 30 | 75,000 | செல்லோ ப்ளாஸ்க் (மூடியுடன்) |
| 7. | 2500 x 40 | 1,00,000 | காளி SS CB தவா |
| 8. | 5000 x 30 | 1,50,000 | பிக்னிக் செட் |
| 9. | 5000 x 40 | 2,00,000 | ஹாகின்ஸ் பிரஷர் குக்கர் |
| 10. | 10,000 x 30 | 3,00,000 | ஜெமினி கிஃப்ட் செட் |
| 11. | 20,000 x 25 | 5,00,000 | 4 கிராம் தங்க நாணயம் |

*அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரருக்கு மட்டுமே.
*நுழைவுக்கட்டணம் தனி *முன் அனுமதி பெறப்பட்டது

DATTARAM 60597

# எந்த வயதிலும் இளமையாய் இருக்கலாம்!

இளைஞர்களோடு கலந்து பழகினால் நடுத்தர வயதினரும் கூட (ஏன் முதியவரும் தான்) தங்கள் வயது சடசடவெனக் குறைந்து விட்டதான உணர்வை அனுபவிப்பது இயல்பு. ஆனால் அவர்களோடு எப்படிப் பழகுவது? 'தலைமுறை இடைவெளி' குறுக்கிடாதா? என்று மனோதத்துவ நிபுணர்களிடம் கேட்டால், "அது ரொம்பவும் சுலபம்!" என்கிறார்கள் அவர்கள்.

"என்ன மந்த்ராவோ, என்ன சிம்ரானோ, இதுங்களெல்லாம் நடிக்க வந்துடுத்து. நடிப்புன்னா டி.ஆர். ராஜகுமாரி அல்லது சாவித்திரியைச் சொல்லணும்" என்றோ, "கண்ட குப்பையை எல்லாம் இப்போது நாவல்னு பிரகரிக்கறாங்க. ஒரு ஷெர்லக் ஹோம்ஸுக்கோ, ஒரு பி.ஜி. வுட்ஹவுஸுக்கோ உறைபோடக் காணுமா இதெல்லாம்?" என்றோ இளைய தலைமுறையினரிடம் பேச ஆரம்பித்தீர்களானால் வெகு சீக்கிரம் அவர்கள் உங்களை 'கழற்றி' விட்டுவிடுவார்கள். தங்கள் தலைமுறையின் ரசனைகளை ஒரேயடியாக அலட்சியப்படுத்தும் அல்லது கேவலப்படுத்தும் எந்த மூத்தவரையும் இளைஞர்கள் ஒருபோதும் ஏற்பதில்லை. இதைத் தவிர்க்க வேண்டுமானால் ஒரு முக்கிய வழியைப் பின்பற்ற வேண்டும். சமீபகால சம்பவங்களை - முக்கியமாக இளைஞர்கள் அதிகம் பேசும் அல்லது விவாதிக்கும் விஷயங்களை - ஓரளவாவது நீங்கள் தெரிந்து வைத்திருக்க வேண்டும்.

'நேருக்கு நேர்' படப்பாடலான 'அகிலா அகிலா' பாடலை இளைஞர்கள் ரசிக்கும் போது, கூடவே ரசித்து விட்டு "அட இது நம்ம பாப் மார்லேவின் Buffalo Soldier ன் அப்பட்டமான உல்டாவாச்சே!" என்று சொல்லுங்கள். டீன்-ஏஜ்காரர்கள் உங்களை அதற்குப் பிறகு "இது நம்ம ஆளு" என்று கருதத் தொடங்குவார்கள். கூடவே அடேயப்பா எத்தனை விஷயங்களைத் தெரிந்து வைத்திருக்கிறார் என்றும் வியப்போடு பார்ப்பார்கள்!

பெரிமாஸன் அல்லது இர்விங் வாலஸோடு நின்றுவிடாமல் ஷிட்னி ஷெல்டன் அல்லது ஜான் க்ரிஷாம் நாவல்களில் ஒன்றிரண்டையாவது படியுங்கள். நிராத் சௌத்ரியோடு நின்றுவிடாமல் சல்மான் ருஷ்டி, அருந்ததி ராய் பக்கமும் வாருங்கள்.

'அந்தக் கால' விஷயங்களை நீங்கள் பகிர்ந்து கொள்ளக் கூடாது என்று இதற்கு அர்த்தம் இல்லை. சுவையான மலரும் நினைவுகளை தாராளமாக பகிர்ந்து கொள்ளலாம். ஆனால் ஒரே சுய தம்பட்டமாகவோ,



பழைமையே பெருமை எனும்படியாகவோ அவை இருக்க வேண்டாம். லேசான நகைச்சுவை அவற்றில் இருக்கட்டும் - சொல்லும் சம்பவங்களில் சிரிக்க எதுவும் இல்லை என்றாலும் சொல்லும் முறையில் அதைக் கொண்டு வரலாம். யாரையும் புண்படுத்தாத நகைச்சுவைக்கு எங்கேயும், எவரிடமும் வரவேற்பு உண்டு - இளைஞர்கள் ஒன்றும் விதிவிலக்கில்லை.

"இனிமேல் புதிதாக எங்கே எம்.டி.வியையோ, உடை ஃபேஷனையோ புரிந்து கொள்ளப் போகிறோம்?" என்று பிரமிக்கும் 'நேற்றைய இளைஞர்கள்' கூட, சினிமா, பரபரப்புச் செய்தி, கிரிக்கெட் போன்ற ஒரு சில வற்றில் கவனம் செலுத்தலாம். இவை

**உடல் மட்டும் இளமையாக இருந்தால் போதாது. உள்ளமும் இளமையாக இருப்பது அவசியம். அதற்கு என்ன செய்ய வேண்டும்?**

## இளமைப் போட்டி — 8

அருந்ததி ராய் எழுதிய முதல் நாவலே உலக அளவில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தி விட்டது. அந்த நாவலின் பெயர் என்ன?

பன்னிரண்டாவது போட்டி முடிவில் கூப்பன் வரும். பன்னிரண்டு விடைகளையும் அதில் எழுதி அனுப்புங்கள். பரிசு நிச்சயம் உண்டு!

பெரும்பாலும் சாகாவரம் பெற்ற சப்ஜெக்டுகள்.

'என் அப்பா என்னிடம் நண்பரைப் போல் தான் பழகுகிறார்!' என்று உங்கள் மகன் எப்போது சொல்லுவான்? நீங்கள் அவனுடைய ரசனைகளைப் புரிந்து கொண்டு, நீங்களும் ரசித்து, அதை அங்கீகரிக்கிற போதுதான் அப்படிச் சொல்வான். உங்களையும் தனது சக வயது நண்பர்களில் ஒருவராகவே பார்ப்பான். நீங்கள் பிடிவாதமாக அவனது உணர்வுகளைப் புரிந்து கொள்ளாமல் பரிகாசம் செய்கிற போதோ அல்லது கண்டிக்கிற போதோதான் அவன் உங்களை ஓர் அப்பாவாக மட்டுமே - வயதானவராக மட்டுமே பார்க்க ஆரம்பிக்கிறான்.

இதனாலேயே நீங்கள் உங்கள் பிள்ளைகளுடைய தவறான ரசனைகளையெல்லாம் நீங்களும் ஏற்றுக் கொண்டு விட வேண்டும் என்பதில்லை. தாராளமாகக் கண்டிக்கலாம்; வழிகாட்டலாம். ஆனால் அவையெல்லாம் வெறும் உபதேசங்களாக இல்லாமல் அப்பா என்கிற சட்டாம் பிள்ளையாக இல்லாமல் - செய்ய வேண்டும்.

இன்றைய இளைஞர்களிடம் உங்கள் எண்ணங்களை மிதமான ஆலோசனைகளாக வெளிப்படுத்துங்கள். அவர்கள் ரசனைக்குரிய விஷயங்களில் உங்களுக்கு ஞானம் குறைவு என்றால் கேட்டுத் தெரிந்துக் கொள்ளுங்கள். உற்சாகத்துடன் விளக்கங்களை தருவார்கள். இன்றைய பெரும்பாலான இளைஞர்கள் பாசாங்கற்றவர்கள்.

தகவல் தொடர்பு - இன்றைய உலகநாடுகளுக்கு மட்டுமல்ல; இளமை தேசத்தில் மறுபிரவேசம் செய்வதற்கும் அதுதான் விசா.

— ஜி.எஸ்.எஸ்.

# சுசுகியின் பிடிவாதம் வெல்லுமா?

**மா**ருதி உத்தியோக் லிமிடெட் நிறுவனத்தில், இப்போது ஒரு புயல் கிளம்பியிருக்கிறது. காரணம், ஆர்.எஸ்.எஸ்.எல்.என் (அப்பாடா, எவ்வளவு இனிஷியல்கள்!) பாஸ்கருடுவை மானேஜிங் டைரக்டராக இந்திய அரசு நியமித்தது. இவர் மாருதியில் இணை மானேஜிங் டைரக்டராக இதுவரை இருந்து வந்தார். அதுவரை மானேஜிங் டைரக்டராக இருந்த ஆர்.சி. பார்கவாவை சேர்மனாக்கியது அரசு.



''திறமையற்றவர் என்று சுசுகி கருதும் ஒரு நபரை இந்திய அரசு மானேஜிங் டைரக்டராக நியமித்திருப்பது வருத்தத்துக்குரியது'' என்று சுசுகியின் தலைவர் ஒசாமா சுசுகி அறிக்கை விட்டார்.

''அவர் இணை மானேஜிங் டைரக்டராக இருந்த வரை குறை காணாத சுசுகி, இப்போது திடீரென்று விழித்துக் கொண்டு அவர் திறமையற்றவர் என்று கூறுவது அபத்தமாயிருக்கிறது!'' என்கிறார் அரசு வழக்கறிஞர் அசோக் தேசாய்.

ஆர்.சி. பார்கவாவை இந்திய அரசு சேர்மனாக ஆக்கி, பாஸ்கருடுவை மானேஜிங் டைரக்டராக ஆக்கிவிட்டதில், இருவருமே இந்திய அரசின் பிரதிநிதிகளாகப் போய்விட்டார்கள். எனவே, தலைவராவது சுசுகியின் நபராக இருக்க வேண்டும் என்று பிடிவாதமாயிருக்கிறது சுசுகி கார்ப்பரேஷன்.

இந்த நியமனத்துக்குத் தாங்கள் சம்மதிக்கவில்லை என்று இன்டர்நேஷனல் கவுன்சில் ஃபார் ஆர்பிட்ரேஷன் எனப்படும் சர்வதேச சமரச அமைப்புக்குப் பிரச்னையைக் கொண்டு போய்விட்டது.

சமபங்குகள் (இந்திய அரசு 50% சுசுகி 50%) கொண்ட ஓர் அமைப்பில், தங்கள் குரலுக்கு மதிப்பே இல்லாத பட்சத்தில் சுசுகி நிறுவனம் எப்படிச் செயல்பட முடியும் என்கிறார் ஒசாமா சுசுகி.

''உங்களுக்கு விருப்பம் இல்லை என்றால் கழற்றி விட்டுவிடுகிறோம். மாருதி கார் நிறுவனத்தின் பங்குதாரர் ஆக ஏராளமான கார் தயாரிப்பாளர்கள் க்யூவில் காத்துக் கொண்டிருக்கிறார்கள்!'' என்று தொழில் அமைச்சர் 'முரசொலி' மாறன் காட்டமாகச் சொல்லியிருப்பதை, டில்லி உயர்நீதி மன்றம் கூட, மறைமுகமாகக் கண்டித்திருக்கிறது.

சர்வதேச சமரச அமைப்பின் தீர்ப்பு எப்படி இருக்கும், எப்போது வரும் என்று தெரியாத நிலையில் பிரச்னை ஜவ்வுதான்!

— சித்தார்த்

# 2020-ஏ! விரைந்து வருக!



ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் ஸ்கூட்டர் வாங்க வேண்டுமானால், பணத்தைக் கட்டிப் பதிவு செய்து விட்டு ஐந்தாறு வருடங்கள் காத்திருக்க வேண்டும்! - இது சில ஆண்டுகள் முன்பு வரை இருந்த நிலைமை. இன்றோ, அதே நிறுவனத்தின் உற்பத்தி சரிந்து போய்க் கிடக்கிறது.

முன்பு, டெல்கோ நிறுவனத்தின் லாரிகளுக்கு ஏக கிராக்கி இருக்கும். இன்றோ, அந் நிறுவனம் உற்பத்தியை முப்பது சதவிகிதம் குறைக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறது.

லாரிகள் உற்பத்தி குறைந்திருப்பதோடு அல்லாமல், லாரி உரிமையாளர்கள் தங்கள் வாகனங்களை வாடகைக்கு விட்டு சம்பாதிக்கும் தொகையும் கணிசமாகக் குறைந்திருக்கிறது. இதனால், தவணை முறையில் லாரிகளை அவர்களுக்கு விற்ற நிதி நிறுவனங்களும் கடனை வசூல் செய்ய முடியாமல் திண்டாடுகின்றன.

இப்படி சங்கிலித் தொடராக பொருளாதார நெருக்கடி பரவுவதற்கு முக்கிய காரணம் தொழில் துறையிலிருக்கும் தேக்க நிலைதான்.

இந்தத் தேக்கம் ஒரு பக்கம் கவலை தர, இன்னொரு பக்கம் அரசுக்கு வர வேண்டிய வருமானமும் ஒழுங்காக வந்து சேரக் காணோம்! வருமான வரி வசூல் மோசமில்லை என்றாலும் சுங்க வரி வசூல் (customs duty) எதிர் பார்த்த அளவுக்கு உயரவில்லை. இந்த நிதியாண்டின் முதல் ஐந்து மாதங்களில் வசூலாகியிருக்கும் சுங்க வரி, கடந்த ஆண்டில் அதே காலகட்டத்தில் வசூலித்ததைக் காட்டிலும் குறைவு.

ஹாங்காங்கில் உரையாற்றிய நமது நிதியமைச்சர் சில கசப்பான உண்மைகளை எடுத்துச் சொல்லியிருக்கிறார் : 'தாராளமயமாக்கல் கொள்கையின் பலன்கள், இந்தியாவின் 300 மில்லியன் ஏழைகளை இன்னும் சென்றடையவில்லை. அரசியல் ரீதியான கட்டுக்கோப்பும் ஒத்துழைப்பும் இன்றி பொருளாதார சீர்திருத்தங்கள் வெற்றி பெற முடியாது,' என்று பேசியிருக்கிறார்.

ஏழைகள் மேலும் ஏழைகளாகத்தான் இந்தப் பொருளாதார நடவடிக்கைகள் உதவியுள்ளன என்பதற்கான வாக்குமூலம் இது! அப்படியிருக்கையில், 'ஆண்டுதோறும் 7-8 சதவிகிதம் பொருளாதார வளர்ச்சி காண்கிறோம், 2020 ஆம் ஆண்டுக்குள் ஏழைமை ஒழிந்துவிடும் என்று நிதியமைச்சர் சொல்வதை எப்படி ஏற்க முடியும்...?

உலகப் பொருளாதாரம் அடுத்து எந்த திசையில் நகரும் என்பது தெரியாத நிலையில், 23 ஆண்டுகளுக்குப் பிறகு நாம் ஏழைமையின்றி வாழ்வோம் என்று ஆருடம் சொல்வது அபாயகரமானது மட்டுமல்ல, இன்றைக்கு விலைவாசியை சமாளிக்க முடியாமல் தவிப்பவர்களுக்கு எரிச்சலை ஊட்டும் விஷயம்.

ஐக்கிய முன்னணி ஆட்சியேற்று ஓராண்டுக்கும் மேல் ஆகிவிட்டது. ஆனால் பொருளாதாரம் சரியான திக்கில்தான் நகர்ந்து கொண்டிருக்கிறது என்கிற அறிகுறி எதுவும் இன்னும் தென்படவில்லை. மக்களுக்கு அந்த நம்பிக்கை பிறக்கவில்லை.

தனியார் நிறுவனங்களைப் போல் அரசும் அரையாண்டு கணக்குகளைச் சமர்ப்பித்து, நாடு தழுவிய கருத்துக் கணிப்பு நடத்தி, வல்லுனர்களின் யோசனைகளைப் பெற்று, அடுத்த அரையாண்டிலேயே திருத்தங்களைப் புகுத்தலாம். இதை ஏற்கெனவே இந்த கன்ஸல்டன்ஸி பகுதியில் கூறியிருக்கிறேன். மீண்டும் அதையே வலியுறுத்த அவசியம் ஏற்பட்டிருக்கிறது.

ஆசியாவின் மிகச் சிறந்த நிதியமைச்சராக ப. சிதம்பரம் அறிவிக்கப்பட்டிருப்பது நமக்குப் பெருமைதான்.

அந்தப் பெருமையுடன் நமது மகிழ்ச்சியும் இணைய வேண்டுமானால் அவர் இன்னும் துணிச்சலுடனும் சிறப்பாகவும் செயல்பட வேண்டும்.

- வி. கோபாலன்

கல்கி கன்ஸல்டன்ஸி

## சென்னைக் குடிநீர் :

# கைகொடுக்குமா

இப்போது, சென்னையில் குடிநீர்ப் பஞ்சம் தலைதூக்க ஆரம்பித்து விட்டது. கிருஷ்ணா வந்துமா இந்த நிலை? நிலைமையை ஆராயப் புறப்பட்டோம்....



• ஜீரோ பாயிண்ட்

'ஆந்திராவில் புயல் - மழை; கிருஷ்ணா நதியில் கட்டப்பட்டுள்ள ஸ்ரீசைலம் அணை நிரம்பி வழிவதால், உபரிநீர் கடலுக்குள் சென்று வீணாகிக் கொண்டிருக்கிறது....' என்று செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன.

இந்த நிலையில், சென்னைக்கு வரும் கிருஷ்ணாநதி நீர்க் கால்வாயில் எந்த அளவுக்கு நீர் வந்து கொண்டிருக்கிறது? எக்கச்சக்கமாக வந்து, பூண்டி, புழலேரிகளெல்லாம் கூட நிரம்பி வழிய ஆரம்பித்துவிடும் என்றுதானே நினைக்கத் தோன்றுகிறது.

அதுதான் இல்லை. இந்த ஆண்டு கோடை மழை தப்பிப் போன மாதிரி, பருவ மழையும் தப்பிப் போனால், சென்னை நகரவாசிகளின் கதி அதோகதிதான் என்பதே யதார்த்தம்.

கிருஷ்ணா நதிநீர்க் கால்வாய் திறந்து விடப்பட்டதை நம்பி, சென்னைப் பெருநகர குடிநீர் வாரியம், தினசரி 24 கோடி லிட்டராக இருந்த சப்ளையை 44 கோடியாக உயர்த்தி விட்டது. கிருஷ்ணாவும் வருகிற நிலையில் பருவ மழையும் சேர்ந்து கொள்கிறபோது, எக்கச்சக்கமாகத் தண்ணீர் கிடைக்குமே என்கிற எதிர்பார்ப்பில் செய்துவிட்டது குடிநீர் வாரியம். இதன் விளைவு? சென்னைக்குக் குடிநீர் வழங்குகிற ஏரிகளின் மொத்த கொள்ளளவில் மூன்றில் ஒரு பங்குக்கும் குறைவாகத்தான் இப்போது ஸ்டாக் இருக்கிறது. (பூண்டி ஏரியை நாம் பார்த்தபோது நீர்மட்டம் பரிதாபமாக இருந்தது) இதனால்தான் இப்போது அறிவிக்கப்படாத குடிநீர் கட்!

இந்த ஆண்டு ஜூலை முதல் அக்டோபர் வரை ஆந்திர அரசு நமக்குத் தருவதாக ஒப்புக்கொண்ட மூன்று டி.எம்.சி. தண்ணீரில், ஒரு டி.எம்.சியாவது வந்து சேருமா என்கிற நிலை. ஏனெனில் கடந்த இரண்டு மாதங்களாக வந்த நீரின் அளவு முக்கால் டி.எம்.சி. கூட இல்லை. இந்நிலையில் பருவ மழையும் சரிவர இல்லாவிட்டால், நிலைமை படுமோசமாகிவிடும்.

ஏன் இந்த நிலை?

கடந்த ஆண்டு செப்டம்பரில் கோலாகலமாக விழா நடத்தி, கிருஷ்ணா நதி நீரைத் திறந்து விட்டார்களே! அதன் பிறகு ஏற்பட்ட உடைப்பையும் சரிசெய்து விட்டதாகச் சொன்னார்களே... இன்னுமா நிலைமை சரியாகவில்லை? என்ன காரணத்தால் தடைப்படுகிறது கிருஷ்ணா? அப்படியே ஒரு விசிட்

# கிருஷ்ணா?



• ஆந்திரப் பகுதிகளில் லைனிங் செய்யப்படாத கால்வாய்...

அடித்துப் பார்த்தோம்.

கிருஷ்ணா நதிநீர் தமிழக எல்லையில் நுழைகிற இடத்துக்கு 'O பாயிண்ட்' என்று பெயர். இது ஆந்திர எல்லையில் இருக்கிற தமிழக நகரான ஊத்துக்கோட்டையிலிருந்து சுமார் நான்கு கி.மீ. தொலைவில் இருக்கிறது. அங்கு சென்று விசாரித்தோம்.

கடந்த 4.7.97 அன்று கிருஷ்ணா நதிநீர் தமிழகத்துக்குத் திறந்து விடப்பட்டிருக்கிறது. அன்று ஜீரோ பாயிண்டுக்கு வந்த நீரின் அளவு விநாடிக்கு 30.10 கன அடி. பிறகு அது கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்து 185.4 கன அடி அளவுக்கு உயர்ந்திருக்கிறது. பிறகு அது குறைந்து போய் விட்டது. நாங்கள் சென்ற நாளில் (22.9.97) 141.05 கன அடிதான் வந்து கொண்டிருந்தது. விநாடிக்கு 1000 கன அடி வருகிற வகையில் கால்வாய் அமைக்கப்பட்டிருக்கிற நிலையிலும் இத்தனை குறைவாக நீர்வரத்து இருப்பதற்கு என்ன காரணம்?

''அவ்வளவு நீரையும் அதாவது கால்வாயின் கொள்ளளவான ஆயிரம் கன அடி அளவுக்கும் நீரைத் திறந்து விட்டால் மறுபடியும் பிரச்னைதான். முன்பு உடைப்பெடுத்துக் கொண்டது போல் இப்போதும் உடைப்பெடுத்துக் கொண்டு விடும்!'' என்றார்கள் ஆந்திராவிலுள்ள சத்தியவேடு நகரில் நாம் சந்தித்த கிருஷ்ணா நதிநீர்க் கால்வாய் சம்பந்தமான ஆந்திரப் பொறியாளர்கள்.

''ஏன் உடைப்பெடுக்க வேண்டும்? முன்பு உடைப்பெடுத்ததைத்தான் சரிசெய்து விட்டீர்களே?''

''உண்மைதான். ஆனாலும் எங்கள் (ஆந்திரா) பகுதியிலுள்ள கால்வாய்கள் தமிழகத்தில் செய்யப்பட்டுள்ளது போல லைனிங் செய்யப்படவில்லையே!'' என்கிறார்கள் அவர்கள். (லைனிங் என்பது கால்வாயின் அடிப்பகுதியிலும் பக்கவாட்டிலும் கற்களும் சிமெண்டும் போட்டுப் பூசுவது!)

ஜீரோ பாயிண்டிலிருந்து தமிழகத்துக்குள் (பூண்டி ஏரிக்கு) வரும் கிருஷ்ணா நதி நீர்க் கால்வாய் முழுவதும் லைனிங் செய்யப்பட்டு பக்காவாக இருக்கிறது. பூண்டியிலிருந்து புழலேரிக்குச் செல்லும் கால்வாயும் லைனிங் செய்யப்பட்டுள்ளது. ஆனால் ஆந்திர எல்லையில் வரும் கால்வாயின் பல பகுதிகள் இன்னும் லைனிங் செய்யப்படாமல்தான் இருக்கின்றன. இதனால் முழு கொள்ளளவு நீரையும் இப்போதைக்கு விட

• வரும் நீரை அளவெடுக்கும் இடம்...



# ஒற்றுமையே வாழ்வின் சாராம்சம்



**தந்தையும் மகனும்**

அன்பு, அக்கறை, நம்பிக்கை, தைரியம் என்ற அடிப்படைகளின் மேல் எழுந்த ஒரு இனிய உறவு. காலம் செல்லச் செல்ல வலிமையுறும் பிணைப்பு. இருவருக்கும் சக்தி ஊட்டி, போஷித்துப் பாதுகாக்கும் நட்புணர்வு அது.

நட்புணர்வு. ஒன்றுபடச் செய்யும் ஒரு உணர்வு. வாழ்வை அர்த்தமுடையதாக்கி ஒளிரச் செய்வது அது. நாளையத் தேவைகளான திருமணம், கல்வி இன்னும் பிற சுப காரியங்களுக்காகவும் திட்டமிட்டு சேமித்து எதிர்காலத்தை வாழ்வதற்குகந்த, பாதுகாப்புமிக்க இடமாக்குவதும் அதுவே. முக்கியமாக, சேமிப்பதற்கும், தேவை ஏற்பட்டால், உங்களது பணத்திலிருந்தே பெருமையுடனும் உரிமையுடனும் கடன் பெற்றுக் கொள்வதற்கும் ஏதுவாக அரியதொரு வசதியைத் தருகிறது. வாழ்க்கையை நம்பிக்கையுடன் எதிர்கொள்ளும் வாய்ப்பை நல்குகிறது.




ராம் காஷ்யப். உங்களது தேவைகளை புரிந்து கொள்கிறது. அத்துடன் அவற்றை நிறைவேற்றும் வழி முறைகளைத் தனது பல்வேறு சீட்டுத் திட்டங்கள் மூலம் அளிக்கிறது. இத்திட்டங்கள் வாடிக்கையாளர்கள் மற்றும் நிறுவனத்திடையே நெருக்கத்தை ஏற்படுத்தி வாடிக்கையாளரின் தேவைகளைப் புரிந்து கொள்ளவும் தக்க சமயத்தில் அவற்றை நிறைவேற்றி வைக்கவும் வகை செய்கிறது. நிலையில்லாததோர் உலகினிலே பாதுகாப்பான ஒரு நங்கூரம் ராம் காஷ்யப் சிட்ஸ். எதிர்காலத்திற்காக முதலில் திட்டமிடுவது, பின் உடனேயே சேமிப்பில் இறங்குவது என்ற கருத்தினை உருவாக்கியவர்கள்.

**Ram Kaashyap Chits**

Member Ram Kaashyap Group

சீட்டு திருவிழா
1997 அக்டோபர் 1 முதல் 31 வரை

**ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தீர்வு**

**ராம் காஷ்யப் சிட்ஸ் பிரைவேட் லிமிடெட் நிர்வாக அலுவலகம் :**
14/3 தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை 600 017. போன் : 4341513., 433004

**கிளைகள் : சென்னை :** ஆழ்வார்பேட்டை போன் : 4970205, மேற்கு மாம்பலம் போன் : 4896838, அண்ணா நகர் கிழக்கு போன் : 610979, அடையாறு போன் 418081, தி.நகர் போன் : 4323437, நங்கநல்லூர் எண்.2, மூன்றாவது மெயின் ரோடு, சென்னை 600 061, **கோயம்புத்தூர்** போன் : 235865, **ஈரோடு** போன் : 79822, **சேலம்** போன் : 418171, **கும்பகோணம்** போன் : 30246, **தஞ்சாவூர்** போன் : 25871, **திருச்சி** போன் : 704752, **மயிலாடுதுறை** 46 எண்.2 ரோடு, (காந்தி ரோடு) மயிலாடுதுறை 609 001, **திருவாரூர்** போன் : 20895, **மதுரை** போன் : 747727, **திண்டுக்கல்** போன் : 34218, **திருநெல்வேலி** போன் : 333808, **காரைக்குடி** எண்.1. T.T. நகர் முதல் தெரு, S.K.N. பில்டிங்ஸ் (கீழ்தளம்) காரைக்குடி 630 001

**நம்பிக்கை பொருளாதார சுதந்திரத்திற்கு அமைத்திடும் பாதை**

Insight-375/97

• பாரதி

# "கரண்ட் இல்லை; அதனால் புறநகர்ப் பகுதிகளுக்குக் குடிநீர் இல்லை!"



சென்னை நகரில் இப்போது தான் குடிநீர்ப் பஞ்சம் என்றாலும் புறநகர்ப் பகுதிவாசிகள் மூன்று நான்கு மாதங்களாகவே படாதபாடுபட்டுக் கொண்டு தான் இருக்கிறார்கள். உதாரணத்துக்கு, பாலாற்றிலிருந்து பல்லாவரம், ஆலந்தூர் போன்ற நகராட்சிப் பகுதிகளுக்கு வரும் கூட்டு குடிநீர்த் திட்டத்தின் சப்ளை மகாமோசம். இதற்கு என்ன காரணம்? ஆலந்தூர் நகராட்சித் தலைவர் ஆர்.எஸ். பாரதியைச் சந்தித்துக் கேட்டோம்.

''ஆலந்தூர் நகராட்சியைப் பொறுத்தமட்டில் உள்ள ஜனத்தொகை 1,65,000. தினசரி 90 லட்சம் லிட்டர் குடிநீர் வந்தால்தான் முழுமையான சப்ளை செய்ய முடியும். 65 லிருந்து 75 லட்சம் லிட்டர் வந்தால் கூட ஓரளவுக்குத் திருப்தியான சப்ளையையே செய்து விடுவோம். ஆனால் எங்களுக்குத் தினசரி வருவதோ 25-லிருந்து 30 லட்சம் லிட்டர்தான். இந்த நிலையில் நாங்கள் என்ன செய்ய முடியும்?

''பாலாற்றில் நிறையத் தண்ணீர் இருக்கிறது. ஆனால் என்ன பயன்? மோட்டார்களும் பழைய மோட்டார் என்கிற நிலையில், கரண்ட் சப்ளை சரியானபடி இல்லாததால் எங்களால் மக்களின் குடிநீர்த் தேவையைப் பூர்த்தி செய்ய முடியவில்லை. குடிநீர் பம்பிங் ஸ்டேஷன்களுக்குத் தனி மின்சார லைன் கொடுங்கள் என்று அரசாங்கத்திடம் கேட்டிருக்கிறோம். அரசு செய்தால்தான் உண்டு!'' என்கிறார் பாரதி.

ஆற்காட்டார் மனம் வைப்பாரா? அல்லது எப்போதும் ஆற்காட்டாருக்கு பக்கத்திலேயே இருக்கிற முதல்வராவது தகுந்த நடவடிக்கை எடுக்க உதவுவாரா? புறநகர்வாசிகள் தீராத தாகத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

முடியாது என்பது மட்டுமில்லை. மழைக் காலங்களில் மண் சரிவு ஏற்பட்டு, கால்வாயில் நீர்வரத்துத் தடைப்படுகிற வாய்ப்பும் நிறையவே இருக்கிறது.

இதுவரை 1018 கோடி ரூபாயைச் சாப்பிட்டிருக்கிற இந்தத் திட்டத்தில் நமது பங்குத் தொகையாக இதுவரை 512 கோடி ரூபாய் கொடுத்திருக்கிறோம். (இன்னும் எவ்வளவு தர வேண்டுமோ தெரியவில்லை)

கிருஷ்ணா நதியில் கட்டப்பட்டுள்ள ஸ்ரீசைலம் அணையிலிருந்து பெண்ணையாற்றுக்குத் தண்ணீர் விடப்படுகிறது. அது கண்டலேறு அணைக்குச் சென்று அங்கிருந்து 151 கி.மீ. பயணம் செய்து நமது ஜீரோ பாயிண்டுக்கு வருகிறது. கண்டலேறுவில் துவங்கும் இந்தக் கிருஷ்ணா நதி நீர்க் கால்வாயின் கொள்ளளவு 11,000 கன அடி. அது வழியிலுள்ள சுமார் மூன்று லட்சம் ஏக்கர் விவசாயத்துக்குப் பயன்பட்டுக் கொண்டே வந்து கடைசியில் நமது ஜீரோ பாயிண்டுக்கு வரும்போது ஆயிரம் கன அடி கொள்ளளவாகக் குறைந்து போகிறது. இது சரியான அளவுதான் என்றாலும் இப்போதைக்கு இதன் அளவு முழுமைக்கும் நீர் திறந்து விட முடியாது என்பதுதான் பிரச்னை.

அது எப்போது தீரும்?

"இதுவொரு மிகச் சிறந்த திட்டம்!" என்று ஆரம்பித்தார் தமிழகத்திலுள்ள கிருஷ்ணா நதிநீர்த் திட்டத்தின் மேற்பார்வைப் பொறியாளரான ஆர்.எஸ்.எம். மனோகரன்.

"இடைப்பட்ட சில பகுதிகளில் (ஆந்திராவில்) கால்வாயைப் பலப்படுத்த லைனிங் போன்ற வேலைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது என்பது உண்மைதான். இது ஒரே நாளில் நடந்து விடுகிற காரியமும் இல்லையே! நமக்குத் தண்ணீர் விடாத காலங்களில்தான் அவர்கள் செய்ய முடியும். அநேகமாக 98-ம் ஆண்டுக்குள் எல்லாம் பக்காவாகப் பூர்த்தியாகி விடும். 99-ல் முழு நீர்வரத்தும் வரத் துவங்கி, நமக்கு வர வேண்டிய (வீணாகும் 3 டி.எம்.சி. போக) 12 டி.எம்.சியும் கிடைத்துவிடும்! அதற்குள் நமக்குக் கிடைக்கும் மழை நீரைச் சேமிப்பதோடு, கிருஷ்ணா நீரையும் முழுமையாகச் சேமிக்கிற அளவுக்கு நாமும் தயாராகி விடுவோம்!" என்றார் மனோகரன்.

ஆக, 99-ம் ஆண்டு வரை சென்னை வாசிகள் சிக்கனமாக இருப்பதுதான் புத்திசாலித்தனம்!

**— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**

அட்டை வண்ணப்படமும், படங்களும் **ஸ்ரீஹரி**

நலம் தரும் நவராத்திரியில்

# வசந்த் & கோவின் சிறப்பு விற்பனை



**(1–10–97 முதல் 9–10–97 வரை)**



ஒரு நாளுக்கு
ஒரு வீட்டு உபயோக
பொருள் என
நவராத்திரி
ஒன்பது
நாட்களும்
சிறப்பு விற்பனை !









| | |
|---|---|
| 1-10-1997 | ரெஃப்ரிஜிரேட்டர் |
| 2-10-1997 | கலர் டிவி |
| 3-10-1997 | வாஷிங் மெஷின் FULLY AUTOMATIC |
| 4-10-1997 | கருப்பு வெள்ளை டிவி |
| 5-10-1997 | வாஷிங் மெஷின் SEMI AUTOMATIC |
| 6-10-1997 | மிக்ஸி, 2-in-1, ஃபேன் |
| 7-10-1997 | கலர் டிவி |
| 8-10-1997 | ரெஃப்ரிஜிரேட்டர் |
| 9-10-1997 | மிக்ஸி, 2-in-1, ஃபேன், டிவி |



**தவணை முறை* மற்றும் பழைய டிவி ஃபிரிட்ஜ் கொடுத்து வாங்குவோருக்கும் இச்சலுகை உண்டு. திட்டம் 2 : தேர்ந்தெடுக்கப்பட்ட ரெஃப்ரிஜிரேட்டர், கலர் டிவி மற்றும் வாஷிங் மெஷின் வாங்குவோர்க்கு Alfa Numeric Pager இலவசம்.**

* தவணைமுறையில் வாங்க வருமான சான்றிதழ், ரேஷன் கார்டு, வங்கி கணக்குப் புத்தகம் மற்றும் போட்டோவுடன் அணுகவும்.

மேலும்
ரூ.10 லட்சம் மதிப்புள்ள 2000 பரிசுகள்
வெல்லும் வாய்ப்பை பெற்றிடுவீர்!
முதல் பரிசு மாருதி வேன்

Insight-419/97

PHILIPS
BPL
ONIDA
VIDEOCON
SAMSUNG
THOMSON
SONY
DAEWOO
LG
Godrej
Whirlpool
TOSHIBA
IFB
ONIDA
Washotex
ULTRA GRIND+
Kelvinator

## vasanth® வசந்த் & கோ

CITIBANK CARDS (VISA/MASTER/DINERS) ACCEPTED. NO SERVICE CHARGES

**சென்னை:** • **தி.நகர்** : 45 தெற்கு உஸ்மான் சாலை & 8A தெற்கு உஸ்மான் சாலை • **மைலாப்பூர்** : முதல் மாடி, லஸ் கார்னர், லஸ் • **புரசைவாக்கம்** : 191 புரசைவாக்கம் நெடுஞ்சாலை • **கோடம்பாக்கம்**: 20, ஆற்காடு ரோடு, மேம்பாலம் அருகில் • **அடையார்** : 4 பத்மநாப நகர், சிக்னல் அருகில் • **பாடி** : 63, M.T.H. சாலை • **வண்ணாரப்பேட்டை** : 339 திருவொற்றியூர் நெடுஞ்சாலை • **ராயபுரம்** : 67 மன்னார்சாமி கோயில் தெரு • **தாம்பரம்** : 21–22 சண்முகம் சாலை • **செங்கல்பட்டு** : 5, G.S.T. ரோடு, இந்தியன் வங்கி அருகில் • **வேலூர்** : 15–16, காட்பாடி ரோடு • **சத்துவாச்சாரி** : 1J, ஆற்காடு ரோடு • **சேலம்** : 34, முதல் அக்ரஹாரம் • **ஓசூர்** : 86 B தாலுகா ஆபீஸ் ரோடு • **கோயம்புத்தூர்** : 15, ஒப்பணக்கார வீதி • **திருநெல்வேலி** : 14, பராசக்தி பில்டிங் • **பாளையங்கோட்டை** : 11, திருவனந்தபுரம் ரோடு, காசி கோபுரம் எதிரில் • **திருச்சி** : 2-B/1 கோட்டை ஸ்டேஷன் ரோடு • **தஞ்சாவூர்** : 11 சிவராயர் கார்டன் முதல் தெரு, மானம்புச்சாவடி • **மதுரை** : 162, தெற்கு மாசி வீதி & 54 தெற்கு மாசி வீதி • **பாண்டிச்சேரி** : 414, மகாத்மா காந்தி ரோடு • **பெங்களூர்** : பிரஸ்டீஜ் கோர்ட், 101/1 K.H ரோடு (டபுள் ரோடு).

ரயில் விபத்து
மீண்டும் ரயில் விபத்து
மீண்டும் மீண்டும் விபத்து
ரயில் கட்டண உயர்வு
என்ன... ட்ரீட்மெண்டை ஆரம்பிக்கலாமா?...



1997 அக்டோபர் 5
ஈசுவர புரட்டாசி 19
மலர் : 56
இதழ் : 10

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தடம் புரளும் ரயில்வே அமைச்சர்!

அரியலூர் ரயில் விபத்து நடந்தபோது ரயில்வே அமைச்சராக இருந்த லால் பகதூர் சாஸ்திரி தார்மிகப் பொறுப்பேற்று ராஜினாமா செய்து, சரித்திரம் படைத்தார்.

சமீபத்தில் மத்திய பிரதேசம் பிலாஸ்பூரில் நடந்த பயங்கர ரயில் விபத்தைத் தொடர்ந்து, இரண்டு அதிகாரிகளைப் பணி மாற்றம் செய்து 'புதுமை புரிந்துள்ளார்' ரயில்வே அமைச்சர்.

சம்பந்தப்பட்ட அதிகாரிகள்தான் விபத்துக்கு நேரடி பொறுப்பென்று நம்புவதற்கு இடமிருந்தால், விசாரணைக்கு உத்தரவிட்டு அது விரைவாகவும் நியாயமாகவும் நடைபெறும்படி அமைச்சர் செய்யலாம்.

அவ்வாறு செய்யாமல் இரு அதிகாரிகளைப் பணி மாற்றம் செய்ததும், பிரதமரின் சம்மதத்துடன்தான் அவ்வாறு செய்யப்பட்டுள்ளது என நியாயப்படுத்துவதும் விபரீதத்துக்கு வழிவகுத்து விட்டன.

நாடு தழுவிய அளவில் ரயில்வே அதிகாரிகள் விடுப்பில் சென்று விட்டனர். அதற்காக அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கப்படும் என அடுத்த அறிவிப்பையும் வெளியிட்டிருக்கிறார் ரயில்வே அமைச்சர் பாஸ்வான்.

ஒருநாள் அடையாள வேலை நிறுத்தத்தினாலேயே ரயில்வே பணிகள் பாதிக்கப்பட்டன என்னும்போது, இந்தப் பிரச்னை 'ஈகோ' மோதலாக வளர்ந்தால் என்ன ஆகும் என்று கூறத் தேவையில்லை.

பிலாஸ்பூரில் நடந்தது போன்ற விபத்துகள் இனியும் நடக்கக்கூடாது என்பதில் சிறிதும்




சந்தேகமில்லை.

ஆனால் ஓரிரு அதிகாரிகளை மட்டும் பணி மாற்றம் செய்வதாலோ, அல்லது அதிகாரிகள் வேலை நிறுத்தம் மேற்கொள்வதாலோ நிலைமை சீரடையப் போவதில்லை. மாறாக, பொறுப்பான அதிகாரிகள் ஒட்டுமொத்தமாக விடுப்பில் செல்லும்போது, தவறுகள் நேர்வதற்கான வாய்ப்புகள் அதிகரிக்கின்றன. ஊழியர் மட்டத்தில் இருப்போருக்கு இது தவறான முன்னுதாரணமாகவும் விளங்கும்.

ரயில்வே பணிகளும் பாதுகாப்பும் ஒட்டுமொத்தமாகச் சீரடைய வேண்டும். அதற்குப் பெரிய திட்டம் ஒன்று வகுக்கப்பட வேண்டும். அதை அரசு தானே செய்வதை விட, பணியிலுள்ள அதிகாரிகளைக் கொண்டு செய்யச் சொல்லலாம். அன்றாட அனுபவம் மிக்க ஊழியர்களின் யோசனைகளையும் இதற்குப் பெறலாம்.

அரசு இதற்கான முதல் அடியை எடுத்து வைக்காவிட்டாலும் கூட, அதிகாரிகள் இதை வலியுறுத்திக் கூறி செயல்படுத்த அனுமதி பெறலாம்.

பொது மக்கள் சேவையிலிருப்பவர்கள் மேற்கொள்ளும் வேலை நிறுத்தம், போராட்டம் போன்றவை அனுதாபத்தைப் பெற்றதாக சரித்திரமே கிடையாது. ஆனால், பயணிகள் பாதுகாப்பை ரயில்வே அதிகாரிகளும் ஊழியர்களும் பெரிய அளவில் சவாலாக எடுத்துக் கொள்வார்களேயானால் நாடு தழுவிய ஆதரவும் நல்லுணர்வும் அவர்களுக்கு நிச்சயம் கிடைக்கும். ரயில்வே சேவையும் மேம்படும்.

## கங்கிராட்ஸ் குஜ்ரால்!

'இந்தோ - பாக் பிரச்னையில் அமெரிக்க தலையீடு அதிகரிக்கப் போகிறது' என்று பரவலாக ஓர் அச்சம் இருந்து வந்தது.

பிரதமர் குஜ்ராலின் அயலுறவு சாணக்கியம் காரணமாக அது தவிர்க்கப்பட்டிருக்கிறது.

ஐ.நா. சபையில் உரையாற்றிய பாக் அதிபர் நவாஸ் ஷெரீஃப் அங்கு இந்தோ-பாக் பிரச்னையை எடுத்துக் கையாண்டிருக்கிறார். அதன் மூலம் உலகின் அனுதாபத்தைப் பெற முயன்றிருக்கிறார்.



அதே அவையில் உரை நிகழ்த்திய நமது பிரதமர், பாக் பிரச்னையை நேரடியாக எழுப்புவதை முற்றிலும் தவிர்த்திருக்கிறார். இந்தப் பெருந்தன்மைக்கு ஒரு தார்மிக வெற்றி கிடைத்திருக்கிறது.

கிளின்டனின் ஆதரவைப் பெறலாம் என்கிற நவாஸ் ஷெரீஃபின் நோக்கமும் வெற்றியடையவில்லை. அமெரிக்க அதிபர் அவருடன் நிகழ்த்திய பேச்சு வார்த்தைகளின் போது, 'இந்தோ - பாக் உறவுகளின் எதிர்காலம் கடந்த காலத்தைப் போல் இருக்கக் கூடாது...' என தமது கருத்தை வெளியிட, 'ஆமாம் ஐம்பதாண்டுகளாக நிலவி வரும் இறுக்கம் தளர வேண்டும்' என்று நவாஸ் ஷெரீஃப் ஒப்புக் கொள்ளும்படி ஆகிவிட்டது.

கிளின்டன் - குஜ்ரால் பேச்சு வார்த்தைகளின்போது, 'இந்தோ-பாக் பிரச்னை என்பது இரு நாடுகளுக்கிடையேயான பிரச்னை; அதில் அமெரிக்கத் தலையீடு இருக்காது' என்பது உறுதிப் படுத்தப்பட்டுள்ளது.

பாகிஸ்தான், அமெரிக்கா ஆகிய இரு நாடுகளுடனான நமது உறவுகள் வலுப்படுத்தப் பட்டிருக்கின்றன.

சமீபத்தில் இந்தோ - பாக் எல்லையில் நடந்த துப்பாக்கிப் பரிமாற்றங்கள் காரணமாக, அயலுறவுத் துறை செயலர்கள் மட்டத்தில் நிகழ்ந்த பேச்சு வார்த்தைகள் வெற்றி பெறவில்லை. குஜ்ரால் - கிளின்டன், குஜ்ரால் - ஷெரீஃப் ஆகியோரின் பயனுள்ள சந்திப்புகளால் அவை புத்துயிர் பெறும் என நம்பலாம்.

உள்நாட்டுப் பிரச்னைகளில் உடனடியாகச் செயல்பட முடியாமல் தவிக்கும் பிரதமர், அயலுறவுக் கொள்கை விஷயத்தில் பளிச்சென்று செயலாற்றியிருக்கிறார். இத்துறையில் அவருக்கு உள்ள அனுபவம் கைகொடுத்திருக்கிறது.

அமெரிக்காவில் பிரதமர் சேகரித்துள்ள லாபங்கள் வளர வேண்டுமானால் உள்நாட்டில் அரசியல் ஸ்திரத்தன்மை வேண்டும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

அடுத்த சவால் பிரதமருக்காகக் காத்திருக்கிறது!

**யார் சூப்பர் டைரக்டர்? என்று கல்லூரி மாணவிகளான சுமனா, சுருஜனா இருவரும் மோதிக் கொள்கிறார்கள். மணிரத்னத்துக்காக வாதாடுபவர் சுமனா. ஷங்கர் என்று வாதாடுபவர் சுருஜனா.**

**சுமனா:** மணிரத்னமா? ஷங்கரா? யார் இவர்களில் சூப்பர் டைரக்டர் என்பதில் சந்தேகமே எனக்கு இல்லை. மணிரத்னம் தான் டாப். அவரோட மௌனராகம் படத்துக்கு இணையாய் தமிழில் இன்னொரு படம் சொல்ல முடியுமா? அது ஒரு கவிதை.

**சுருஜனா:** மௌனராகம் நல்ல படம்தான். ஆனால் அதற்கு முன்னால் மணிரத்னம் படங்கள் எடுத்திருக்காரே! முதல் படமான பகல் நிலவு வந்தபோது, மணிரத்னம்னா யாருன்னே தெரியாது. மௌனராகம் ஹிட் ஆனபிறகு



# யார் சூப்பர்? மணிரத்னமா?

தான் அவருக்குப் பெயர். ஆனால் ஷங்கர் அப்படியில்லை. முதல் படமே சூப்பர் ஹிட்.

**சுமனா:** ஜென்டில்மேன் படம் ஏன் வெற்றி பெற்றது? பாட்டுகளாலதானே? ஒரு சிக்கு புக்கு ரயில், ஒட்டகத்தைக் கட்டிக்கோ பாட்டு ஹிட் ஆகாம இருந்திருந்தா ஷங்கரின் படம் ஓடியிருக்குமா?

**சுருஜனா:** திருடா திருடா படத்தின் பாட்டுகள் எல்லாம் பயங்கர ஹிட்! ஆனா படம் படு தோல்வி. ஏ.ஆர். ரஹ்மானின் இசை இருந்தும் கூட படம் ஊத்திக் கொண்டதே! நம்ப முடியாத கதை. ஒரு கன்டெயினர் முழுக்க கரென்ஸி நோட்டாம். அதை அடைய துரத் தராங்களாம். முழும் முழுமா காதுல பூ சுத்தப் பார்த்தார் மணிரத்னம்!

**சுமனா:** காதலன் கதை மட்டும் நம்புகிறமாதிரியா இருந்தது? சாதாரண போலீஸ்காரன் மகன், கவர்னர் பொண்ணை லவ் பண்ணறானாம். கவர்னரே சதிவேலைகளில் ஈடுபடுகிறாராம். நம்புகிற மாதிரியா இருக்கு? மதவெறி, இந்து-முஸ்லிம் எதிர்ப்பு என்பது நாட்டின் எரிகிற பிரச்னை. எத்தனை துணிச்சலா அதை வைத்து பம்பாய் படம் எடுத்தார் மணிரத்னம்? கத்தி மேல் நடக்கிறாற் போன்ற சென்ஸிடிவ் ஆன பிரச்னையை ஒரு காதல் கதையில் பின்னி, ரொம்ப அழகாய் சொல்லியிருந்தாரே. அது ஒரு கவிதை!

**சுருஜனா:** சென்ஸிடிவ் ஆன பிரச்னையை கையாளுகிற போது ஏன் 'ஹம்மா... ஹம்மா...', 'குச்சி குச்சி ராக்கம்மா' என்று பாட்டெல்லாம்?

**சுமனா:** ஷங்கர் இந்தியன் படத்துல கையாண்ட விஷயம் லஞ்சம். அப்புறம் ஏன் ஊர்மிளாவும், மனிஷாவும்? மாயா மச்சீந்தரா அங்கே ஏன் வரணும்? ஜாகிர் உசேனின்

[redacted]

தபலாவுக்கு அங்கே என்ன வேலை?

**கருஜனா:** இந்தியன் படத்தோட ஹைலைட் என்ன? கிழவர் கமல். அவரோட மேக்-அப் எவ்வளவு பிரமாதமாய் இருந்தது? அந்த மேக்-அப் போட்டுக் கொண்டு, அவர் ரோடுல நடந்து போன போது, யாராலயும் அடையாளமே கண்டு பிடிக்க முடியலையாம். அந்த அளவுக்கு யுனீக்கான மேக்-அப்! அதுதானே கமலுக்கு சிறந்த நடிகருக்கான தேசிய விருதை வாங்கிக் கொடுத்தது?

**கமனா:** மணிரத்னம் படமான நாயகனை மறக்க முடியுமா? இந்தியன் படத்துலயாவது, அவரது நடிப்புக்கு, வயதான மேக்-அப் உதவியாக இருந்தது. ஆனால், நாயகன்ல என்ன ஒரு எக்ஸலெண்ட் நடிப்பு!





# ஷங்கரா?

நெருப்புல கருகிவிட்ட தன் மகனோட உடம்பைப் பார்த்துவிட்டு, சோகம் பொங்க அழுவாரே! அந்த இடம் கிளாஸ்! அந்த படத்துக்கும் தான் கமலுக்கு தேசிய விருது கிடைத்தது!

**கருஜனா:** இருவர் படத்தை எடுத்துக் கொண்டால், அதில் அப்படி என்ன இருக்கிறது? ஏதோ ஒரு பத்திரிகையில், தமிழ்நாட்டு அரசியல் பற்றின இரண்டரை மணி நேர நியூஸ் ரீல் பார்க்கிறமாதிரி இருக்குன்னு விமர்சனம் எழுதியிருந்தாங்க. எதுக்காக அந்த மாதிரி ஒரு சப்ஜெக்டை படமா எடுத்து அடிவாங்கணும்?

**கமனா:** ஒரு கிரியேட்டிவ் பர்சனாலிடியிடம் நீங்க இந்த மாதிரித்தான் படம் எடுக்கணும், இந்த சப்ஜெக்ட்ஸ் பத்தித்தான் படம் எடுக்கணும் அப்படின்னு கண்டிஷன் போட முடியும்?

**கருஜனா:** நான் கண்டிஷன் போட வேண்டும் என்று சொல்லவில்லையே! எடுங்கள். எந்த மாதிரியான விஷயங்களானாலும் சரி, படமாய் எடுங்கள். ஆனால் சுவாரசியமாய், ரசிக்கும்படி எடுங்கள். முழுக்க முழுக்க பொழுது போக்காக இருக்கட்டும். அதிலே ஒரு மெஸேஜையும் சொல்லுங்கள். உங்களையும் குழப்பிக் கொண்டு, எங்களையும் போரடிக்காதீர்கள்னு நான் சொல்லறேன்.

**கமனா:** ரோஜா என்ற அற்புதமான படம் எடுத்தாரே, அதில் பொழுது போக்கு இல்லையா? அதில் தீவிரவாதிகள் பிரச்னையைச் சொல்லவில்லையா?

**கருஜனா:** தீவிரவாதிகள் பிரச்னைக்கு என்ன தீர்வு என்று அவர் சொல்லவில்லையே! அந்த குறிப்பிட்ட தீவிரவாதி மனம் திருந்துவது போலக் காட்டிவிட்டது, தீவிரவாதப் பிரச்னைக்குத் தீர்வு ஆகாதே!

**கமனா:** ஒரு பிரச்னையின் தீவிரத்தைப் படம் மூலமாய் மக்களுக்கு எடுத்துச் சொல்லலாம். அதற்குத் தீர்வு சொல்ல வேண்டியது சினிமாக்காரரின் வேலையில்லை என்பது ஒரு பாயிண்ட்! பிரச்னைக்குத் தீர்வு என்றால் என்ன பண்ண

வேண்டும்? தீவிரவாதிகள் அனைவரையும் அடியோடு ஒழிக்க வேண்டும். அல்லது அவர்கள் அனைவரும் தம் பாதையை விட்டுவிட்டு சரணடைய வேண்டும். இரண்டில் எதைக் காட்டினாலும் ரொம்ப செயற்கையாக இருக்குமில்லையா?

கருஜனா: தளபதி படத்தில் கிளைமாக்ஸில் என்ன பண்ணினார்? ரஜினிகாந்த் சாகிறாற்போலக் காட்டினால், ரசிகர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பதற்காக, மம்மூட்டி சாகிறாற்போல முடித்தது காம்ப்ரமைஸ் தானே!

சுமனா: நாயகனில் ஹீரோ கமல் சுட்டுக் கொல்லப்படுவது போலத்தானே முடிவு! காம்ப்ரமைஸ் என்ற பேச்சே இல்லை. கதையின் கேரக்டர்கள் எப்படியோ அதற்கேற்ப முடிவு. அவ்வளவுதான். அரவிந்த்சாமி என்ற அழகான ஹீரோவைக் கண்டு பிடித்தவர் யார்? மணிரத்னம்தானே! ரஹ்மான் என்ற சூப்பர் இசையமைப்பாளரை சினிமாவுக்கு அழைத்து வந்தவர் யார்? மணிரத்னம்தானே?

கருஜனா: சரிதான்! ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் ஷங்கரின் படம் மூலம்தானே அர்ஜுனுக்கு ஒரு பெரிய பிரேக் கிடைத்தது? பிரபுதேவா என்ற டான்ஸரை ஹீரோ அந்தஸ்துக்கு உயர்த்தியது யார்? என்று நானும் வாதாடலாம்.

சுஜனா: ஷங்கர் படத்தில் பிரம்மாண்டம் இருக்கிறது. அந்த பிரம்மாண்டம் நமக்குப் புதுசாய் இருக்கிறது. அதனால் படம் ஓடுகிறது. பிரம்மாண்டம் இல்லாமல் ஷங்கரால் ஒரு படம் எடுக்க முடியுமா? இன்னொரு விஷயம்- மணிரத்னம் அகில இந்திய அளவில் புகழ் பெற்ற டைரக்டர். அவர் எடுக்கிற படங்களுக்கு அகில இந்திய அளவில் ரசிகர்கள் இருக்கிறார்கள்.

கருஜனா: ஜென்டில்மேன் படம் இந்தியில் எடுக்கப்பட்டது. காதலன் இந்தியில் ரிலீஸ் ஆனது. இந்தியன் படம் கூட இந்தியில் 'இந்துஸ்தானி' என்று வெளியானது. ஷங்கர் படங்களுக்கும் அகில இந்திய அளவில் ரசிகர்கள் இருக்கிறார்கள்.

சுஜனா: ஜென்டில்மேன் தமிழில் வெளியாகி, ஹிட் ஆன பின் இந்தியில் மறுபடி எடுக்கப்பட்டது. ரஹ்மானின் பாடல்கள் சூப்பர் ஹிட் ஆனதால், காதலன் படம் பின்னர் இந்தியில் டப்பிங் செய்யப்பட்டது. ஆக, மணிரத்னம் போல, அகில இந்திய அளவில் நேரடி ரசிகர்கள் வட்டாரம் இருப்பதாக ஷங்கர் பெருமைபட்டுக்கொள்ள முடியாது.

கருஜனா: மணிரத்னம் சுருக்கமா தனக்குன்னு ஒரு ஸ்டைல் ஏற்படுத்திகிட்டிருக்காருன்னாலும், அவருடைய வசனங்கள் ரொம்ப செயற்கை. கேரக்டர்களோட இயல்பான தன்மையை வெளிப்படுத்துகிறாற்போல இல்லை. ஆனா ஷங்கரோட படங்கள்ல பொதுவா வசனம் ஷார்ப்பாவும், இயல்பாவும் இருக்கும். ஜீன்ஸ் படம் வரட்டும். அதுவும் சூப்பர் ஹிட் ஆகும். தொடர்ச்சியா முதல் படத்திலிருந்து நாலு படம் ஹிட் கொடுத்த தமிழ் டைரக்டர் ஷங்கர் என்று பேசப் போறாங்க பாருங்க!

தொகுப்பு: **கௌதம்**

படம்: **ஸ்ரீஹரி**



''உனக்கு எந்த குறையிருந்தாலும் கேளு; நான், தீர்த்து வைக்கிறேன்'னு ரூம்க்குள்ள தலைவர் பேசிக்கிட்டிருக்காரே உள்ளே அவரு கூட யாரு இருக்கா?''

''வேற யாருமில்லைய்யா! தலைவர் தன்னோட மனச்சாட்சி கூட பேசிட்டிருக்காரு.''

– ஆலங்குளம் அருள்



''ஏண்டா, ஒவ்வொரு பரீட்சையிலும் இவ்ளோ குறைச்சலா மார்க் வாங்குறே?''

''அதிகம் பெறாதே. அவதிப்படாதேன்னு ஊர்ல மூலைக்கு மூலை எழுதி வைச்சிருக்கே, அதனாலதான் சார்!''

– வெ. ராஜாராமன்

வண்ணப்படம் : அமிர்தம்



சீண்டவும் சிந்திக்கவும் வைக்கும் சிரிப்புத் தோரணம்; பிரமிக்க வைக்கும் புகைப்படக் காட்சியகம்; பாதுகாக்க வேண்டிய சிறுகதைப் பெட்டகம்; உயிரோட்டம் மிக்க ஓவியக் கலைக் கூடம்; காணக் கிடைக்காத கவிதைப் பொக்கிஷம்; தேடித் தேடித் தொகுத்த கட்டுரைகளின் களஞ்சியம்!

விலை ரூ. 50/-

அழகிய அம்சங்களின் அணிவகுப்பு
உயர்ந்த விஷயங்களின் பிரதிபலிப்பு!

# கல்கி தீபாவளி மலர் '97

மேலும் விவரங்களுக்கு உடனே உள்ளூர் கல்கி ஏஜெண்டிடம் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது மானேஜர் கல்கி, சென்னை - 97 என்ற முகவரிக்கு எழுதுங்கள்.

தபாலில் பெற ரூபாய் இருபது சேர்த்து அனுப்ப வேண்டும்.



"போலீஸ் ஸ்டேஷன் பக்கத்தில் வீடு பார்க்காதீங்கன்னு சொன்னேனே. கேட்டீங்களா?"

"ஏன் என்ன ஆச்சி?"

"லாக்-அப்பில் இடம் இல்லை. ஒரு திருடனை அடைக்கணும். ஒரு ரூம் இருக்குமான்னு இன்ஸ்பெக்டர் கேட்டுட்டுப் போறாரு!"

— வெ. ராஜாராமன்



"ஆனாலும் அந்த ஃபீல்டர் ரொம்ப மோசம்!"

"எப்படிச் சொல்றீங்க?"

"மிஸ் பண்ணின கேட்ச்சை 'ஆக்ஷன் ரீப்ளே'லயாவது சரியாப் பிடிச்சுடுவார்'னு பார்த்தா அப்பவும் கோட்டை விட்டுட்டாரே!"

— ஜெயா ப்ரியன்

மும்பை

# மும்பையில் நடந்த ஸ்டிரைக் வாரம்!

## ரயில் ஸ்ட்ரைக்!

சென்ற வாரத்திற்கு 'ஸ்ட்ரைக் வாரம்' என்றே பெயரிடலாம்; அத்தனை தொல்லை. பிள்ளையார் சுழி போட்டது, 'ரயில்வே மோட்டார்மென்'களின் ஸ்ட்ரைக்! ஐந்தாவது சம்பளக் கமிஷன் அறிவித்த சலுகைகள் அவர்களுக்குப் போதவில்லையாம்! வெறும் 750 பேர், 12 மில்லியன் மும்பைவாசிகளை தவிக்கவிட்ட கதையிருக்கிறதே... அப்பப்பா! சொந்த வாகனங்களில் சென்ற புண்ணியவான்கள் தங்கள் வாகனங்களில் ஏற்றினார்கள் - கண்ணில் பட்டவர்களை! டாக்ஸி, ஆட்டோக்காரர்களும் ஏற்றினார்கள் - கண்டபடி கட்டணத்தை! 'பெஸ்ட்' 'எக்ஸ்ட்ரா' பஸ்களில் ஏற்றினார்கள் - கண்டறியாத கூட்டத்தை! சாலைகளெல்லாம் 'ஜாம்' ஆக, எல்லோருக்கும் அன்று ஓசியில், ஜனவாச ஊர்வலம் சென்ற அனுபவம்! பத்து மணிக்கு ஆபீசில் ஆஜராக வேண்டியவர்கள், 12.30க்குத்தான் 'மஸ்டரில்' கையெழுத் திட்டனர். பேசாமல் 'எல்லோரும் ஒரு நாளைய சம்பளத்தை மோட்டார் மென்களுக்குத் தருகிறீர்களா' என்று இனி கேட்டால் கூட, பூரா மும்பையும் 'தாராளமாக' எனத் தலையசைக்கும் அளவுக்கு நொந்துவிட்டார்கள்.



• முண்டே

## ஆட்டோ ஸ்ட்ரைக்!

மும்பை நகரின் தேவைகளுக்கு, 75,000 ஆட்டோக்கள் போதுமானது. ஆனால் இருப்பதோ ஒன்றேகால் லட்சம் ஆட்டோக்கள்! எனவே பலரும் ஈ ஓட்டும் நிலை! ஆட்டோ வாங்கிய கடனையே பலரால் அடைக்க முடியவில்லை! சிவசேனை அரசு, கண்டபடி பர்மிட்டுகளை வாரிக் கொடுத்துவிட்டு, இன்று, கொடுத்தவர்களிடமிருந்தே வாங்கிக் கட்டிக் கொண்டிருக்கிறது. 'ஏழை மண்ணின் மைந்தர்'களுக்கல்லாது, ஏனையோருக்கு இனி பர்மிட்டுகளை வழங்கக் கூடாது. பர்மிட் பெற்றவர்கள், ரிக்ஷா வாங்க 'வேண்டிய காலத்தை மூன்று வருடங்களாக இல்லாமல், மூன்று மாதங்களாக மாற்ற வேண்டும், தாதர் வரை ஆட்டோக்களை அனுமதிக்க வேண்டும் என்பன போன்ற கோரிக்கைகளுடன், ஒருநாள் ஆட்டோ ஸ்ட்ரைக்

நடந்தது. இரயில் ஸ்ட்ரைக் நடந்த மறு நாளே, ஆட்டோ ஸ்ட்ரைக். அன்று பார்த்து, முலுண்டு - பாண்டுப் பகுதியிடையே ரயில் விபத்து. ரயில்களுடன் அன்று போட்டி போட்டிருந்தால் ஆமைகள் கூட ஜெயித்திருக்கும்.

### முனிசிபாலிடி ஸ்ட்ரைக்!

கூடுதல் முனிசிபல் கமிஷனர் ரத்னாகர் கெய்க்வாட், "முனிசிபாலிடியில் வேலைசெய்பவர்களெல்லாம் ஒரு நாளைக்கு இரண்டு மணி நேரம் வேலை செய்தாலே அதிகம்" என்று (உண்மையைச்) சொன்னதற்கு, இவர்களுக்கு மூக்கின் மேல் கோபம் வந்துவிட்டது! இனி இரண்டு மணி நேரம் மட்டுமே வேலை செய்யப் போவதாக (அஃபிஷியலாக) அறிவித்ததுடன், போனஸ் பிரச்னையையும் பூதாகரமாக்கி விட்டிருக்கிறது. மூன்று வருடங்களில் 430 கோடி ரூபாய் போனஸ், இலவச பஸ் பிரயாணம், இவையிரண்டிற்கும் நிர்வாகம் ஒப்புக் கொள்ள வில்லை என்றால், மூன்று நாட்களுக்கு எல்லாத் தொழிலாளர் களும் தற்செயல் விடுப்பில் போகப் போவதாகவும், இதனால் அத்யாவசியத் தேவைகளான தண்ணீர் சப்ளை, நகர சுத்தி, ஆஸ்பத்திரிகள் எல்லாமே பாதிக்கப்படும் என்றும், பயமுறுத்திக் கொண்டிருக்கிறார்கள். விடுவாரா கெய்க்வாட்? இரண்டு மணி நேர போராட்டக்காரர்கள் பலரை சஸ்பெண்ட் செய்துவிட்டார். வேலை நிறுத்தம் செய்தால், ஹோம் கார்டுகளை வைத்துக் கொண்டு நிலைமையை சமாளிக்கப் போவ தாக சவால் விட்டிருக்கிறார்!

• பாஸ்வான்

### மீண்டும் ரயில் ஸ்ட்ரைக்!

அம்பேத்கர் சிலை விவகாரம் நினைவிருக்கிறதா? அதில் மரித்த வர்களின் குடும்பங்களுக்கு, ரயில் வேயில் வேலை தருவதாக, ரயில் மந்திரி ராம் விலாஸ் பாஸ்வான் வாக்குறுதியளித்தார். மராத்திய அரசு அவர்களின் கண்ணீரைத் துடைக்குமென கோபிநாத் முண்டே சத்தியம் செய்தார். பின்ன வர், பாதிக்கப்பட்ட பத்து குடும்பங்களுக்கும் படபடவென்று, மின் வாரியத்தில் வேலைக்கான நியமனங்களை அனுப்ப, நாலு பேர் நன்றிப் பெருக்குடன் வேலையில் சேர்ந்து விட்டார்கள். முன்னவரின் வாக்குறுதி புஸ்வாணமாயிற்று! 'ப்யூரோக்ராடிக் டிலே' என்ற முகாரியை அவர்கள் பாடிக் கொண்டிருக்க, முண்டே விழாவெல்லாம் எடுத்து, ஆனந்த பைரவியை, அல்ல லுற்றோர் குடும்பங்களில் அலை அலையாகப் பரவ விட்டிருக் கிறார். "அடடா! நமக்குக் கிடைக்க வேண்டிய நற்பெயரை இவர் தட்டிக் கொண்டு விட்டாரே" என்ற எரிச்சல் மனத்துள் கனன்று கொண்டிருக்க, வரிசையாய் ரயில் விபத்துகள் வாகாய் அணிவகுத்து விட்டன! இதுதான் சாக்கென்று, மத்திய ரயில்வே யின் ஜி.எம். ஸின்ஹாவும், தென் கிழக்கு ரயில்வேயின் ஜி.எம். ராமனாதனும் இடமாற்றம் செய்யப்பட்டிருக்கிறார்கள். மத்திய ரயில்வே ஊழியர்கள், இந்த அநியாய மாற்றங்களை எதிர்த்து, ஸ்ட்ரைக்!

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**



**• எல்லா மனிதர்களும் இதயத்தால் கவிஞர்களே!**
**— எமர்சன்**

**• நவீன கவிதையை எழுதும் கவிஞர்கள் பேனா மையுடன் அதிக அளவு தண்ணீரைக் கலக்கிறார்கள்!**
**— கதே**

**• காதலில் ஈடுபடும் போது ஒவ்வொரு மனிதனும் கவிஞன்தான்!**
**— பிளேட்டோ**

**• கவிஞர்கள் பொய் சொல்வதற்கு உரிமம் பெற்றிருக்கிறார்கள்!**
**— பிளினி**

**தகவல் : ந. இரவிசந்திரன்**

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் பூமியில் வாழ்ந்த மொத்த நாட்கள் 20075. இதில் 4000 நாட்கள் சிறையில் இருந்துள்ளார். அதாவது தம் வாழ்நாளில் 5ல் ஒரு பகுதியை சிறையிலேயே கழித்தவர் தேவர்!

ஆதாரம் : 'தேவர் திருமகன்'
தகவல் : ராஜிராதா

26

"என்ன சொல்கிறாய் நீ?" என்று திகைத்தாள் பேஜ்.

"கவனமாய்க் கேள்," என்றாள் அவள் சிநேகிதி ஜேன். "இன்று காலை கடைத் தெருவுக்குப் போயிருந்தபோது என் தோழியொருத்தியைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தேன். செனெட்டரின் மனைவி லாரா ஹட்சின்ஸை அவளுக்குப் பல வருஷமாகத் தெரியுமாம். சின்ன வயதிலிருந்தே லாராவுக்குக் குடிப் பழக்கம் உண்டாம். அதற்காகச் சில வருடங்களுக்கு முன்பு சிகிச்சை கூடச் செய்து கொண்டாளாம். அதற்குப் பிறகு அவள் ஒழுங்காகத்தான் இருந்து வருகிறாள் என்று என் சிநேகிதி சொல்கிறாள். ஒருவேளை மறுபடி குடிக்க ஆரம்பித்திருக்கிறாளோ என்னவோ? விபத்து நடந்த அன்று ராத்திரி அவள் குடித்திருக்கலாம் இல்லையா?"

ஜேன் சொல்வதைப் பற்றி யோசித்த வண்ணம் சிறிது நேரம் பேசாமல் இருந்தாள் பேஜ். வதந்தி, கிசுகிசு , பழியைத் தூக்கி யார் தலைமீதாவது போட வேண்டுமென்ற பரபரப்பு - எதுவானால் என்ன, நடந்தது நடந்து விட்டது. இனிமேல் எதுவும் எதையும் மாற்றப் போவதில்லை.

ஆதாரமில்லாமல் யாரையும் குற்றம் சொல்லக் கூடாது என்று

11



'ACCIDENT' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம்

தமிழில் : ரா.கி. ரங்கராஜன்

எண்ணியவளாக, "லாரா மீது தப்பு இருந் திருக்காது," என்றாள்.

"தப்போ தப்பில்லையோ, கொஞ்ச நாளில் பேப்பரில் வந்து விடும். எல்லாப் பேப்பர்க் காரர்களும் லாரா விஷயத்தைத் துருவிக் கொண்டிருக்கிறார்கள்," என்றாள் ஜேன்.

"வதந்திகளை வைத்துக் கற்பனை செய்து கொள்ளக் கூடாது. ரொம்பக் காலத்துக்கு முன்பு லாராவுக்குக் குடிப்பழக்கம் இருந்தது என்பதற்காக இன்றைக்கு அவள் மீது குற்றம் சாட்டுவது நியாயமில்லை," என்று பேஜ் மீண்டும் சொல்லவே ஜேனுக்கு ஏமாற்றமாகி விட்டது. இறந்து போன பையன் பிலிப்பின் மீது பழி விழாமல், லாரா மீது விழவேண்டும் என்பது அவளுடைய பரபரப்புக்குக் காரணம். "சரி, மேலும் ஏதாவது தகவல் கிடைத்தால் சொல்கிறேன்," என்றாள்.

"தாங்க்ஸ், ஜேன்," என்று கூறிவிட்டு அன்றாட வேலைகளை அமைதியாகக் கவனிக்கலானாள் பேஜ். பெரும் ஆபத்திலிருந்து நேற்றிரவு ஆலிஸன் பிழைத்து விட்டாள் என்ற எண்ணம் அவள் மனத்துக்கு நிறைவு தந்திருந்தது. சில கடிதங்களுக்குப் பதில் எழுதினாள். சில பில்களுக்குப் பணம் அனுப்பினாள். வீட்டு வரவு செலவுகளைக் குறித்துக் கொண்டாள். இதுபோன்ற தினசரி வேலைகளில் ஈடுபட்டு ஒரு வாரமாகிறது. எனவே அந்தச் சில்லறை வேலைகளில் மனம் நிறைவு பெற்றது.

மறுநாள் காலை ஆண்டியைப் பள்ளிக் கூடத்தில் கொண்டு போய் விட்டுவிட்டு



©டேனியல் ஸ்டீல்

மூலம் : டேனியல் ஸ்டீல்



ஆஸ்பத்திரிக்குச் சென்றாள். கடந்த இரண்டு நாளில், ஏதோ சாதித்த மாதிரி திருப்தி ஏற்பட்டிருந்தது அவளுக்கு. முக்கியமாக, குழந்தை ஆண்டியுடன் சிறிது நேரம் இருக்க முடிந்ததில் அவளுக்குச் சந்தோஷம். தாயின் அரவணைப்புக்காக ஏங்கியிருந்தான் அவன். எப்படியும் இன்னும் கொஞ்ச காலத்துக்கு வாழ்க்கையில் போராட வேண்டியிருக்கும். ஆசையால் பதற்றப்படாமல் உள்ளத்திலும் உடலிலும் வலு ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது முக்கியம் என்று எண்ணினாள்.

காலை ஒன்பது மணிக்கெல்லாம் ஆஸ்பத்திரியை அடைந்தாள். நர்ஸ்கள் அவளைக் கண்டதும் புன்னகை செய்தார்கள். ஆனால் அந்தப் புன்னகையில் எச்சரிக்கை இருந்தது. முந்தின இரவு ஆபரேஷனின் போது ஆலிஸன் மரணத்தின் வாசல் வரை போய்விட்டுத் திரும்பினாள் என்பது எல்லா நர்ஸ்களுக்கும் தெரியும். ஒவ்வொரு தினமும், ஒவ்வொரு நிமிடமும் கடவுள் தரும் பரிசு; விலைமதிக்க முடியாத பரிசு.

"எப்படி இருக்கிறாள்?" என்று தயக்கத்துடன் கேட்டாள் பேஜ்.

"அப்படியேதான் இருக்கிறாள்," என்றாள் பிரான்ஸிஸ் என்ற நர்ஸ். அவளுக்குப் பேஜின் வயதுதான் இருக்கும். அறிவும், பரிவுள்ள இதயமும் கொண்டவள். இனிமையாகப் பேசுகிறவள். "டாக்டர் ஹேமர்மேன் ஒருமணி நேரத்துக்கு முன் வந்து பார்த்து விட்டுப் போனார். முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று திருப்தி தெரிவித்தார்" என்றாள்.

ஆலிஸனின் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டு, கையைப் பிடித்துக் கொண்டாள் பேஜ். தலையில் பெரிய பெரிய கட்டுப் போட்டிருந்ததால் எதுவும் தெரியவில்லை. "மூளையில் வீக்கம் குறைந்திருக்கிறதா?" என்று நர்ஸைக் கேட்டாள்.

"கொஞ்சம் குறைந்திருக்கும்," என்றாள் அவள்.

வழக்கம் போல ஆலிஸனுடன் மெல்லிய குரலில் பேசத் தொடங்கினாள் பேஜ். நேற்றைக்கு இன்று வெளிப்படையாக எந்த மாற்றமும் தென்படவில்லை ஆலிஸனிடம். இருந்தாலும் ஏனோ தெரியவில்லை, பேஜின் மனத்தில் ஒரு நிம்மதி பரவியிருந்தது. நடப்பவற்றையெல்லாம் அமைதியாக ஏற்றுக் கொள்ளும் தைரியம் உண்டாகியிருந்தது. கணவன் பிராடிடம் ஏற்பட்டிருந்த கோபம் கூடச் சற்றுக் குறைந்திருந்தது. நேற்றைய இரவு ஆலிஸனின் உயிருக்காக நடந்த போராட்டம் அவள் உள்ளத்தில் ஆழப் பதிந்து விட்டது. அந்த அனுபவம் அவளை மாற்றியிருந்தது. அது அவளுக்கே தெரிந்தது.

காலை பத்து மணிக்குத் தாரென்ஸன் வந்த போது, அவனும் அவளிடம் ஏற்பட்டிருந்த மாற்றத்தைக் கவனித்தான். "இந்த வாரத்தில் இப்போதுதான் முதல் தடவையாக நீ சந்தோஷமாக இருப்பதைப் பார்க்கிறேன்," என்றான்.

"இருக்கலாம்," என்று புன்சிரிப்புடன் பதிலளித்தவள் க்ளோவைப் பற்றி விசாரித்தாள்.

"தேவலை. அவளைச் சாதாரண அறைக்கு அழைத்துப் போயிருக்கிறார்கள். இன்னும் ஒரு வாரத்தில் வீட்டுக்குப் போகலாம் என்றார்கள்," என்றான் தாரென்ஸன். அவன் குரலில் நிம்மதியும் உற்சாகமும் இருப்பதைப் பார்க்க அவளுக்கும் சந்தோஷமாக இருந்தது.

இருவருமாக க்ளோவின் அறைக்குப் போனார்கள்.

எவ்வளவு சினேகிதிகளின் கூட்டம்! அறை நிறைய எத்தனை பூங்கொத்துக்கள்!

க்ளோ இன்னும் வலியில் முனகிக் கொண்டிருந்தாலும் சினேகிதிகளைப் பார்த்ததில் முகம் மகிழ்ச்சியால் நிறைந்திருந்தது.

க்ளோவின் சினேகிதிகளுக்கு வழி விட்டுத் தாரென்ஸனும் பேஜும் அறைக்கு வெளியே ஒதுங்கி நின்றார்கள். "கார் விபத்தில் உயிர் பிழைத்தானே, அந்தப் பையன் ஜேமி, அவனும் க்ளோவைப் பார்க்க வேண்டுமென்று என்னிடம் கேட்டான். இன்னும் இரண்டொரு நாள் போகட்டும் என்று சொல்லியிருக்கிறேன்," என்ற தாரென்ஸன், "ஆண்டி எப்படி இருக்கிறான்?" என்று கேட்டான்.

"பிராட் அதிகமாய் வீட்டுக்கு வருவதில்லை. ஆண்டிக்குக் கொஞ்சம் கொஞ்சம் நிலைமை புரிந்திருக்கிறது."

"பாவம்," என்றான் தாரென்ஸன்.

"ஆமாம். ஆண்டியிடம் நான் இன்னும் ஒன்றும் சொல்லவில்லை."

"நான் பாவம் என்று சொன்னது ஆண்டியைப் பற்றி அல்ல. உன்னைப் பற்றி. பிராட் செய்வது ஏதோ தாற்காலிகமான சபலம் என்று நினைத்திருந்தேன்..."

"இல்லை. இது ரொம்ப நாளாக நடந்து கொண்டிருக்கிறது. வீட்டை விட்டுப் போய் விடுவதாகக் கூட அவர் சொல்லிக் கொண்டிருக்கிறார்" என்றாள் பேஜ். எவ்வளவு சுலபமாக, அமைதியாக அந்த வார்த்தைகள் தன் வாயிலிருந்து வந்து விட்டன என்பதை நினைத்த போது அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. பதினாறு வருஷ தாம்பத்தியம்! அதை முறித்துக் கொண்டு வெளியே போவதாகக் கணவன் சொல்கிறான்! இந்த சனி ஞாயிறில் வீட்டுக்கு வருவதற்கில்லை என்று இன்று காலை கூடச் சொன்னான்! அப்படியும் அதைப் பெரிதாக நினைக்கத் தோன்றவில்லையே!

● ஆசையை அகற்றினால் அனைத்துமே நமக்குச் சொந்தம் என்பது விளங்கும்! – ஈசா (அசை). தகவல்: தாகூர் ஏ. காதர்

"நான் கொஞ்சம் கூடச் சந்தேகப்படாமல் இருந்து விட்டேன். அடி முட்டாள் நான். ஆனால் ஒன்று. முந்தா நாள் ராத்திரி, கிட்டத் தட்ட இறந்து விட்டாள் என்ற நிலைமைக்கு ஆலி போய்விட்டு உயிரோடு திரும்பி வந்த பிறகு, எனக்கே ஏதோ புதிய தெம்பு பிறந்த மாதிரி இருக்கிறது. பிராட் விஷயம் கூட அப்படியொன்றும் தலைபோகிற ஆபத்தாக இப்போது தோன்றவில்லை. எங்கேயிருந்துதான் எனக்குப் பலம் வந்ததோ, ஆச்சரியமாக இருக் கிறது," என்றாள் பேஜ்.

"இந்த மனம் இருக்கிறதே, இது ஒரு அற்புத மான பொக்கிஷப் பெட்டி. நமக்கு எப்போது என்ன தேவையோ அப்போது அதைக் கொடுக் கும்," என்றான் தாரென்ஸன். "சரி, நாளை சாயந் தரம் உனக்கு ஏதாவது வேலை இருக்கிறதா?"

"ஆலியைப் பார்ப்பதற்காக இங்கே ஆஸ் பத்திரிக்கு வர வேண்டும். எதற்குக் கேட்கிறீர் கள்?"

"நீ ஆண்டியுடன் என் வீட்டுக்குச் சாப்பிட வாயேன். என் பெரிய பையன் நிக் காலேஜுக் குப் போய் விட்டான். இங்கே க்னோலை அவள் சினேகிதிகள் வந்து பார்த்துக் கொள்வதாகச் சொல்லியிருக்கிறார்கள். நானும் என் சின்னப் பையன் பிஜானும்தான் வீட்டில் இருப்போம். நீ ஆண்டியை அழைத்துக் கொண்டு வந்தால் அவனுடன் பிஜான் சந்தோஷமாக விளை யாடிக் கொண்டிருப்பான்," என்றான் தாரென் ஸன்.

பிஜானுக்கு ஏறத்தாழப் பதினெட்டு வய தாகப் போகிறது. ஆனால் மனவளர்ச்சி குன்றிய வனாகையால், பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுவன் போல இருந்து வந்தான்.

"உங்களுக்கு ஏன் வீண் சிரமம்?" என்று சொல்லிப் பார்த்தான் பேஜ். ஆனால் தாரென் ஸனின் கண்களில் தெரிந்த மன்றாடல் சரியென்று சொல்ல வைத்தது.

"அப்பா இந்த வாரம் வீட்டுக்கு வர மாட்டார் என்று பேஜ் சொன்னபோது ஆண் டிக்கு ஏமாற்றமாக இருந்தது. "என்னம்மா, சனிக் கிழமை ஞாயிற்றுக் கிழமைகளில் கூடவா அப்பாவுக்கு ஆபீசில் வேலை?" என்று முணு முணுத்தான். ஆனால் தாரென்ஸனின் வீட் டுக்குப் போகப் போகிறோம் என்றதும் திருப்தி யாகி விட்டான்.

தாரென்ஸனின் வீட்டில் ஆண்டியும் பிஜா னும் மிகவும் சினேகமாகி விட்டார்கள். இரண்டு பேருக்குமே பேஸ்பால் விளையாட்டில் ஆர்வம் உண்டு. இரண்டு பேரின் அக்காக்களும் ஆஸ்பத்திரியில் இருக்கிறார்கள். அது அவர் களிடையே ஒரு பந்தத்தை ஏற்படுத்தியது. தந் தைக்கு ஒத்தாசையாகத் தானும் சிறிது சமையல் வகைகளைச் செய்தான் பிஜான். சாப்பிட உட்கார்ந்தபோது அவர்கள் இரு வரும் கலகலப்பாகப் பேசிக் கொண்டிருப் பதைக் காணத் தாரென்ஸனுக்கும் பேஜுக் கும் ஆறுதலாக இருந்தது.

பேஜ் ஆஸ்பத்திரிக்குப் புறப்பட, வாசல் வரை வந்த தாரென்ஸன், "பிஜானை வளர்க்க நான் பட்டபாடு கொஞ்ச நஞ்ச மல்ல. எவ்வளவோ காயங்கள், விபத்துக்கள். ஒரு தடவை ஸ்டவ் பற்றவைத்து, தீக்காயம் கூட ஏற்படுத்திக் கொண்டான். மகா பொறுமையுடன் அவனைக் காப்பாற்றி வந்திருக்கிறேன். நாளைக்கு ஆலியைக் கவனித்துக் கொள்ளும்போது உனக்கும் அப்படியொரு பொறுமையும் விடாமுயற்சி யும் இருக்க வேண்டும். கஷ்டமான சமயங் களில் எனக்கு உதவி செய்ய நடுநடுவே யாராவது நல்ல மனிதர்கள் கிடைப் பதுண்டு. உனக்கும் அந்த மாதிரி கிடைப் பார்கள். தைரியமாக இரு," என்றான்.

பிஜானும் ஆண்டியும் புல்வெளியில் பேஸ்பால் விளையாடுவதைப் பார்த்தபடி ஒரு நிமிடம் நின்றுவிட்டு ஆஸ்பத்திரிக்குப் புறப்பட்டாள் பேஜ். நெடுங்காலத்துக்குப் பிறகு அவள் மனசில் அமைதி நிரம்பி யிருந்தது.

எத்தனை கஷ்டங்கள் வேண்டுமானா லும் வரட்டும். பரவாயில்லை. தாங்கிக் கொள்ளலாம். கை கொடுக்க இதோ தாரென்ஸன் இருக்கிறார். நல்ல சினேகிதர்.... கொந்தளிக்கும் கடலிலிருந்து தப்பி, பசுஞ்சோலைகள் நிறைந்த தீவில் கரையேறினாற்போல இருந்தது அவளுக்கு.

ஆஸ்பத்திரிக்குச் சென்றவள், ஆலி ஸனின் நிலைமை மோசமடையாமல் அப்படியே இருப்பதை அறிந்துகொண்டு, அவளருகில் சிறிது நேரம் உட்கார்ந்து இருந்துவிட்டு, ஆண்டியை அழைத்துக் கொள்வதற்காகத் தாரென்ஸனின் வீட்டுக்குத் திரும்பினாள்.

அவளைப் பார்த்ததும் புன்னகை செய்தான் தாரென்ஸன்.

"என் பையன் உன் பையனை விட மாட்டேன் என்கிறான். ராத்திரிச் சாப் பாட்டுக்கும் நீ இங்கேதான் தங்க வேண்டி யிருக்கும்," என்றான்.

இதயம் படபடத்தது பேஜுக்கு. தன் வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்படப் போகிறது என்று அவள் உள்மனம் சொல்லியது.

(தொடரும்)

● முதுகுக்குப் பின்னால் ஒரு காரியம் மட்டுமே செய்யலாம். அது மெய்வரின் முதுகை தட்டிக் கொடுப்பதுதான். - ஆஸ்கார் ஒயில்ட்.
தகவல்: ஆர். கோபாலகிருஷ்ணன்

# ஓலை பொழுக்கி

சற்று நேரம் மனம் விட்டு அழ வேண்டும் போல் தோன்றியது, மகாலிங்கத்துக்கு. சுற்றிலும் பார்த்தான். யாரும் இல்லை. சத்தமிட்டுப் பாடத் தொடங்கினான். "நான் உன்னை அழைக்கவில்லை என் உயிரை அழைக்கிறேன்... என்னைப் படைத்த தெய்வம் இன்னும் கண்ணைத் திறக்கவில்லை. வந்து பிறந்து விட்டேன். ஆனால் வாழத் தெரியவில்லை..." மீண்டும் மீண்டும் அழுத்தமாகப் பாடி விம்மி விம்மி அழுதான்.

வரிசை வரிசையாகப் பாடிய சோகப் பாடல்கள் மனப்பாரத்தைக் குறைக்க, கடல் மணலில் குப்புற விழுந்து அழுது முடித்தான். மனத்தில் மெல்ல மெல்லத் தெளிவு பிறந்தது. எழுந்து அமர்ந்து முகத்தை வேட்டி முனையால் துடைத்தான்.

சற்று நீங்கிக் கடல் நீரில் மீனவச் சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருந்தனர். முன்பெல்லாம் கடற்கரைக்கு வந்தால் அவனும் அப்படித்தான். குழந்தைகளைப் போல் கடல் மணலில் புரண்டு... விளையாடி.....

அன்றைய காலத்தில் அவன் அப்பாவுக்கு வேலை இருந்தது. குடித்து விட்டு காக்கிச் சீருடை அணிந்து கொண்டு சர்க்கஸ் கோமாளி போல் போவார். எப்பொழுதும் போதையிலேயே கிடந்தாலும் மாதச் சம்பளம் ஒழுங்காக வீட்டுக்கு வந்து விடும். கண்டவர்களிடமிருந்து அநீதியாக கைநீட்டி வாங்கும் பணம் முழுக்கக் குடியில் வீணாகும். அதில் என்னதான் சுவையோ?

அடுத்தவரைத் துன்புறுத்தி வாங்கிய பணமே கடைசியில் அவர் வேலைக்கு வினையாகி... குடித்துவிட்டுப் பாரா பார்த்த இடத்திலேயே அமர்ந்து தூங்கி, திருட்டுப் போய் வேலை சஸ்பெண்ட் ஆக, விசாரணைக்கு ஒத்துழைப்புக் கொடுக்காமல் வேலை பறிபோய்...

இப்பொழுது வேலைக்கும் போகாமல் ஊரை சுற்றிக் கொண்டு சோம்பேறிகளுக்கு ராஜாவாக வாழும் அப்பா...

அப்பாவைத் திருத்த முடியாமல் தனக்கென்று பாதை தேடிக் கொண்டு நான்கு பிள்ளைகளையும் கணவனையும் பேணும் அம்மா...

அம்மாதான் ஆசைப்பட்டு, 'பிச்சை எடுத்தாவது நன்றாகப் படி' என்று படிக்க வைக்கிறாள். தேங்காய்க் கதம்பைகளை எந்திரத்தில் நசுக்கிப் பிரித்த தும்புகளை தரப்படுத்தும் வேலை... இரவு பகல் கண்விழித்து வேலை பார்த்து, பிள்ளைகளும் தங்களால் முடிந்த அளவில் தாய்க்கு ஒத்தாசை செய்தும் படித்தும்... எல்லோரும் நன்றாகப் படிக்கிறார்கள்.

பசித்த வயிற்றுக்குப் பச்சைத் தண்ணீர் குடித்தும் படிப்பின் மேல் பாசம் கொண்டு வாழ்ந்தார்கள்.

மகாலிங்கம் தான் மூத்தவன். எம்.ஏ. முடிக்க இன்னும் சில மாதங்களே இருக்கின்றன. கல்லூரிக் கட்டணம் கட்ட வேண்டும். அம்மாவிடம் சொன்ன போது அலமந்தாள்.

எல்லோரும் முடிந்த அளவு உழைத்தும் ஐந்து காசு மிச்சம் இல்லை. வேலை செய்து கொடுப்பவர்களிடம் சிறுகச் சிறுக வாங்கிச் சேர்த்த சில ஆயிரம் ரூபாய் கடன்கள்... மேலும் மேலும் அவர்கள் தரமாட்டார்கள்.

எவ்வளவோ முயன்றும் முடியாத நிலையில் தான் அம்மா அந்த யோசனையைச் சொன்னாள்.

"நான் ஒண்ணு சொல்லுவேன் கேப்பியா மகாலிங்கம்?"

"என்னம்மா?"

"உம் மாமங்கிட்டப் போய் வெவரத்தச் சொல்லி, கொஞ்சம் ரூவா கைமாத்தாட்டுக் கேளு..."

செ. வரதராஜன்

சூடு போட்டது போல் துடித்தான் மகாலிங்கம்.

மாமா... அம்மாவின் உடன் பிறப்பு...

மாமாவுக்குத் தனிக் குடும்பம், பிள்ளைகள், குட்டிகள், செல்வம் என்று சேர்வதற்கு முன்பு வரை அம்மா என்றால் உயிர்தான். ஆறுமுகமான மாமா ஆபிரகாம் ஆகித் திருமணம் செய்து, பணம் பெற்றபின் அவருக்குக் கண்ணே தெரியவில்லை. 'பணத்திற்காக மதம் மாறிக் கல்யாணம் செய்யாதே' என்று உபதேசித்த அக்காவும் மைத்துனரும் பகைவர்கள் போலாகி விட்டனர்.

மாமாவின் வீட்டுக்குப் பள்ளிக்கூட விடுமுறைகளில் போவதென்றால் மகாலிங்கத்திற்கும் அவன் சகோதரர்களுக்கும் வெகு உற்சாகம்! வயிறு நிறைய சோறு, மாங்காய், கொல்லாம் பழம், பனங்கிழங்கு... நினைத்தாலே தேனூறும் பொருட்கள் எல்லாம் கிடைக்கும்.

பத்து வயதிருக்கும் அப்போது. மாமாவின் மகள் சுந்தரிக்கு ஆறு வயது....

அப்பாவுக்கு வேலை பறிபோனதை மாமாவிடம் சொல்லச் சொல்லி அம்மா அனுப்பி வைத்தாள். நாலு மைல் நடந்து களைத்து வந்து விவரம் சொன்னவளை எவரும் ஏனென்று கேட்கவில்லை.

"பொலயாடி மொவனுக்குக் கொழுப்பு. வேற என்னத்தச் சொல்ல?" என்று சற்று நேரம் அவன் அப்பாவை மாமா வசைபாடிய போது அவனுக்கும் கூட மகிழ்ச்சியாகத்தான் இருந்தது.

''லேய் பழையது குடிச்சிட்டுப் போறியா?'' என்று மாமி கேட்டாள்.

"சரி மாமி..." என்றான். 'குடிச்சிட்டுப் போறியா?' என்று மாமி சொன்னது என்னவோ போல் இருந்தது. மாமி தன்னை போகச் சொல்லி விடுவாளோ?

சுந்தரி கையில் தோசையை கடித்துக் கொண்டிருந்தது. நாக்கில் எச்சில் சுரக்கச்



செய்தது.

பழைய கஞ்சி. கிடைத்ததைக் குடித்தான்.

"அத்தான் இந்தா..." என்று தான் சாப்பிட்ட மிச்சத்தை சுந்தரியும் கொடுக்க, மாமி வருகிறாளா என்று சுற்றிலும் பார்த்தபடி ஆவலோடு வாங்கித் தின்றான்.

கைகழுவச் சென்றபோது அடுக்களையில் நிறைய காய்கறிகளை அக்கம் பக்கத்து வீட்டிலிருந்து வந்த பெண்கள் நறுக்கிக் கொண்டிருப்பதைக் கவனித்தான். மற்றொரு பெண்ணின் முன்னால் கொன்று தோலுரிக்கப்பட்ட நான்கு கோழிகள்...

ஆகா, அருமையான சாப்பாடு கிடைக்கப் போகிறது என்று மனம் கும்மாளமிட்டது.

தின்ற பாத்திரத்தைக் கழுவி வைத்துவிட்டு வெளியே வந்தவன், சுந்தரியுடன் விளையாடும் போது கேட்டான்.

"அத்தான் எங்க வீட்டுல நிப்பியா?"

"ஒங்க வீட்டுல என்ன விசேஷம் சுந்தரி?"

"அயனம் குடுக்கிறாங்களாம்... சோறு எறச்சி எல்லாம் பாவங்களுக்குக் குடுக்கிறோமுன்னு அப்பா சொல்லிச்சிது. நீயும் நிப்பியா?"

"சரி... எல போட்டுத்தானா சோறு கெடைக்கும்?"

"ஆமா... நெறைய எல வாங்கி வச்சிருக்கியோம்... காட்டித் தரட்டா?"

காட்டினாள்.

சிறிது நேரம் கழித்து, கிடைத்த சந்தர்ப்பத்தில் மாமா கேட்டார். "நீ போறியால?"

என்னவோ போலிருந்தது. "இல்ல மாமா" என்றான்.

"அக்கிரமம் பண்ணாம இருக்கணும்" என்றார்.

**வி**ளையாடிக் கொடிருந்த நேரத்தில் சுந்தரியைக் காணவில்லை. தேடி நடந்தபோது மாமாவின் அதட்டல் சத்தமும் சுந்தரியின் அழுகைச் சத்தமும் எங்கேயோ கேட்டது.

வீட்டின் பின்புறம் வைக்கோற் போரின் அந்தப் பக்கம்...

"அந்தப் பயகிட்ட நீயாட்டி சொன்னே நம்ம வீட்டுல இன்னைக்குப் பாவங்களுக்குக் குடுக்கிறோம்ன்னு..."

"இல்லப்பா..."

"பின்ன எப்பிடிடி அவனுக்குத் தெரிஞ்சது? அவன் ஏன் போவாம நிக்கிறான்?"

அந்தப் பிஞ்சு வயதிலேயே மனம் புண்ணாகிப் போக, சொல்லாமல் கொள்ளாமல் வீட்டுக்கு ஓடி வந்து விட்டான் மகாலிங்கம்.

அம்மாவிடம் வந்து சொல்லி அழுது புரண்டு தன் துன்பத்தை ஆற்றினான்.

மாமாவின் வீட்டிற்கு அதற்குப் பிறகு போனதே இல்லை. மாமா எப்பொழுதாவது வந்து அழைத்தால் கூட போகவில்லை. அந்த மாமாவிடம் போய் அம்மா ரூபாய் கடன் கேட்கச் சொல்லுகிறாள்.

"அம்மா நான் படிப்பை நிறுத்தினாலும் அந்தான் கிட்டப் போய் கடன் கேக்க மாட்டேன்."

"நடந்தத வச்சிப் பேசாத... போ... பிச்சை எடுத்தாவது படிக்கணும்னு நீ படிச்சிருக்குதியா? நாம பிச்சை எடுக்காண்டாம். கடனாட்டுக் கேளு... படிப்பு முடிஞ்சி வேலை கெடச்சதும் குடுத்திடலாம்..."

படிப்பு முடிந்ததும் வேலையா? அம்மாவின் அறியாமை அவனுக்கு வேதனையாக இருந்தது. வேலை இமயமலையின் உச்சி என்றால் அவன் பாதாளத்தில் அல்லவா கிடக்கிறான்?

அம்மாவிடம் சொல்லவில்லை. மறுக்கவும் முடியவில்லை. இத்தனை ஆண்டு காலத்தில் மாமா மாறியிருக்கலாம். ஒருவேளை பரிதாபப் பட்டுத் தந்து விட்டால்.... நல்லதுதானே!

ஆனால் மாமா இன்னும் மாறவில்லை. என்கிட்ட பைசாக்குச் சொல்லி அனுப்பினாளாக்கும்? உன்னால மோனே நான் இன்

## அருள்வாக்கு

தனி ஸ்தாபனங்கள் இல்லாமலே, தனி மனிதர்களாகவும், ஸங்கமாகவும் பொதுநலப் பணி புரிவது நமது வைதிக தர்மத்துக்கு ஆதாரமான ஓர் அம்சமாக ஆதியிலிருந்து இருந்து வந்திருக்கிறது.



'இன்ஸ்டிட்யூஷனைலஸ்' செய்யாமல் தன்னியல்பாக நம் வாழ் முறையிலேயே, கண்ணுக்குத் தெரியாமல், ஒட்டிக் கொண்டு பரோபகாரம் நடைபெறுவதில் ஒரு உத்தமமான அம்சம் என்ன என்றால் இங்கேதான் அஹங்காரம் தலை தூக்கவே இடமில்லாமலிருக்கிறது. 'இன்ஸ்டிட்யூஷன்' என்றால் office-bearers (அதில் பதவி வகிப்பவர்கள்). எலெக்ஷன், போட்டா போட்டி, பப்ளிஸிடி எல்லாமும் வந்துதான் சேரும். அதனால்தான் நான் ஸங்கமாகச் செய்ய வேண்டிய அநேகப் பணிகளைச் சொல்

கிறபோதுகூட, இதற்காகத் தனி ஆர்கனை
ஸேஷனும் office-bearers உம் வேண்டாம்.
ஏற்கெனவே இருக்கிற வார வழிபாட்டுக்
கழகம், பாவை கமிட்டி, பஜனை கோஷ்டி,
ஸத்ஸங்கம் ஏதாவது ஒன்றின் மேற்பார்
வையிலும் பொறுப்பிலும் இந்தப் பணி
களையும் கொண்டுவந்து விடுங்கள் என்
கிறேன். ரொம்பப் பெரிசாக திட்டம் போட
வேண்டாம். அவசியத்துக்கு அதிகமாக வசூல்
பண்ண வேண்டாம் என்றெல்லாம் நான்
எச்சரிப்பதற்கும் காரணம், இப்படிப் பெரி
சாகக் கால் வைத்தால் முதலில் இதைச்
செய்யும் நம் ஸ்தாபனத்துக்கு பப்ளிஸிடி
தேட வேண்டி வரும்; அது அப்படியே
வழுக்கிவிட்டு ஸ்தாபனத்தில் ஈடுபட்
டிருக்கிற நமக்கும் Self-publicity தேடிக்
கொள்கிற சபலத்தில் கொண்டு விடும்.
ஆண்டு விழாவில் நாம் வரவேற்பு சொல்ல
மாட்டோமா, வந்தனோபசாரம் சொல்ல
மாட்டோமா, வருகிற முக்யஸ்தர்களுக்கு
மாலையாவது போட மாட்டோமா,
ஃபோட்டோவிலாவது தெரியும்படி நிற்க
மாட்டோமா என்று இப்படியெல்லாம்
மனஸை அலையச் செய்யும். **அதாவது
அஹங்காரத்தை அழித்துக் கொள்ளவே
ஏற்பட்ட பொதுத் தொண்டு, நேர்மாறாக
அஹங்காரத்தை விருத்தி செய்கிறதாக
விபரீத ரூபம் எடுத்து விடும்.** தான் இருக்
கிற இடமே தெரியாமல், தன் கார்யம் மட்
டுமே தெரிவதுதான் தொண்டின் லக்ஷணம்.
**இதனால்தான் தர்மே க்ஷரதி கீர்த்த நாத்**
என்று சொல்கிறது. அதாவது, பாபம்
பண்ணி விட்டேன் என்று ஒருத்தன் வெளி
யில் சொன்னாலே எப்படி அவனுடைய
பாபம் நசித்து விடுமோ, அப்படி ''தர்மம்
பண்ணுகிறேன்'' என்று தண்டோரா
போட்டுக் கொண்டால் அதனால் ஒருத்
தனுக்குக் கிடைக்கிற புண்யமும் நசித்து
விடுமாம்!

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

னும் எங் கார்டுக்கு ரேசன் கூட வாங்கல்ல... எங் கஷ்டம் சொன்னாத் தெரியாது...."

சுந்தரியின் பெரிய விழிகள் அவனைத் தழுவின. அவள் மனம் தன்பால் ஈர்க்கப் பட்டிருப்பதை அவன் சிறு வயது முதலே அனுபவித்தவன். அவளும் அவன் படிக்கும் கல்லூரியில் பி.ஏ. படிக்கிறாள். அவன் அவளைப் பார்த்தாலும் பேசுவது வெகு அபூர்வம்.

அவன் சோர்ந்து திரும்புவதைக் கண்டு பதைத்தவளால் ஒன்றும் செய்ய முடியவில்லை என்பது கையைப் பிசைந்து நிற்கும் கோலத்திலேயே தெரிந்தது.

வந்து விட்டான்.

இனி என்ன வழி? இவ்வளவு துன்பப் பட்டுத் தொடர்ந்த கல்லூரிப் படிப்பை முடித்து விட வேண்டியதுதானா?

ஏழை என்ற காரணத்திற்காகத் தங்களை ஆதரிக்க மறுக்கும் மாமாவின் முன் என்றாவது ஒருநாள் கௌரவமாகத் தலை நிமிர்ந்து நிற்க வேண்டாமா?

எங்கேயாவது ஓடிப் போனால் என்ன? கண்காணாத இடத்திற்கு ஓடிப் போய் கணக்கில்லாத பணம் சம்பாதிக்க திரைப்பட கதாநாயகர்களால் முடியும். உண்மை வாழ்வில் அப்படி முடியுமா? தன்னை ஊன்றுகோலாக எண்ணும் வீட்டினரின் கதி அப்பொழுது என்னவாக இருக்கும்?

ஒரு முடிவுக்கும் வரமுடியாமல் பழைய சாலை வழி கால்கள் நடக்க, நகரின் மையப் பகுதிக்கு வந்து பேருந்து நிலையத்தின் சிமெண்ட் இருக்கையில் அமர்ந்தான்.

"லேய் எந்திரி... லேய் எந்திரில..." என்று ஒரு வயோதிகர் கீழே கிடந்த இளைஞன் ஒருவனை உசுப்பிக் கொண்டிருந்தார். முதியவருக்கு அறுபதுக்குமேல் வயதிருக்கும். கூலித் தொழிலாளி போல் பரட்டைத்தலை, அழுக்கு உடைகளுடனிருந்தார்.

"என்ன பெரியவரே?" என்று கேட்டான்.

"சவத்துப் பயல நம்பி ஒரு வேலய ஏத்துப் பிடிச்சேன். முன் பணம் வாங்கி கொஞ்சத்தக் குடுத்தேன். குடிச்சிக்கிட்டு வந்து படுத்திருக்கான். இனி இவன் எப்ப எழும்பி எப்பிடிக் கொண்டு போய் நான் என்னத்த செய்யதுக்கு?"

அவர் மேல் பாவமாக இருந்தது. "அண்ணாச்சி அண்ணாச்சி" என்று மகாலிங்கமும் சேர்ந்து அழைத்தான்.

அசையவில்லை. கிழவர் தலையில் கையை வைத்துவிட்டு அமர்ந்தது. "இனி இந்த நேரத்துல யாரப் போய்ப் பாக்க?" என்று வருந்தினார்.

வேலை... பணம்... மகாலிங்கத்திற்கு அந்த யோசனை தோன்றியது.

"என்ன வேலை பெரியவரே?"

திரும்பி இவனைப் பார்த்தார். இளைஞன்;



''உங்க வீட்டுல உங்க 'அம்மா' டீவியைப் போடுறாங்க, உடனே உங்க 'மனைவி' டீவியை அணைக்கிறாங்களே ஏன்?''

''ரெண்டு பேரும் சண்டைக்கு ரெடியா யிட்டதை 'சிம்பாலிக்கா' காட்டுறாங்க!''

— இ. ராதாகிருஷ்ணன்

அழகன்; ஏழைமைக் கோலமாக இருந்தாலும் அழுக்கில்லாத ஆடைகள்; முகத்தில் அறிவுக் களை...

அவநம்பிக்கையுடன், ''உனக்கு லாயக் இல்லப்பா...'' என்றார்.

''அப்பிடி என்ன வேலை பெரியவரே?''

''வேண்டாம்ப்பா... படிச்சவனாட்டுத் தெரி யுது. உன் வயசுல எனக்கும் பிள்ளை இருக் கான். பத்தாங்கிளாசு தோத்து நாலு வருசமா பரீச்ச எழுதியும் உருப்படாத பய... ஆனா மேனா மினுக்கு... கண்ணாடி முன்னால நின்னு வெலகணும்ன்னா ஒரு மணிக்கூர்... சட்டையும் குழலும் மாட்டி ஒதுங்கி வரணும்ன்னா ஒம்பது மணிக் கூர். எங்க வயசுல எப்படி வீட்டுக்கு அடங்கி இருந்தம் தெரியும்மா? இப்ப உன்ன புள்ளைங்கள்ட்ட ஏதாவது சொன்னா உடனே தான் போறேன் பரதேசம்பான்....''

''நான் அந்த மாதிரி இல்லைங்க. தலை மறந்து எண்ணெ தேய்க்கிற பழக்கம் எனக் இல்ல. உழைச்சிச் சம்பாதிக்கிறதுல என்ன கொறைச்சலு?''

''அது....'' என்று கிழவர் தயங்கியபடி, ''வேலைன்னு சொன்னதும் ஏதோ கஷ்டப் பட்ற வேலைன்னு நீ நெனைக்கிறேப்பா... ஆனா நான் சொல்லுயது மானங்கெட்டப் பொழப்பு...''

''வேல செய்யறதுல என்ன மானங்கெட்டுப் போகும்?''

''நான் சொல்லுறேன் உனக்குப் பிடிக் குதுன்னா வா... கல்யாண வீட்டுல பந்தி வச்சி சாப்பிட்ட பெறகு எச்சில் இலைய எடுப்பாங்க இல்லியா? அந்த வேலதாம்பா...'' என்றார் முதியவர்.

மகாலிங்கத்திற்குத் தன்னை யாரோ மேலே தூக்கிக் கீழே போட்டது போலிருந்தது. என்ன பதில் சொல்வதென்று புரியாமல் விழித்தான்.

''நாலு வீட்டுல கக்கூஸ் வாருவதும் நாலு கல்யாண வீட்டுல எல பொறுக்குவதும்தான் எங்க வேல தம்பி. இப்ப இந்தப் பாவிப்பய வரல்லேன்னா நான் என்ன செய்வேன்னு குழப்பமா இருக்குது. ரெண்டு மணிக்கூர் வேல செய்தா நூறும் கெடைக்கும் நூத்தம்பதும் கெடைக்கும். நல்ல பைசா... அத குடிச்சி மோனாம சேத்து வச்சி அனுபவிக்கத் தெரியணுமே...''

மகாலிங்கத்தின் மனத்தில் சில கூட்டல் கழித்தல் கணக்குகள் நடந்தன.

''இன்னைக்கு ராத்திரி மட்டுமா இந்த வேல பெரியவரே?''

''மாப்பிள்ளை வீட்டுக் கல்யாணம்ன்னா ராத்திரில வேல இருக்கும். பொண்ணு வீட்டுக் கல்யாணம்ன்னா பகல்ல வேல. பந்தி வச்சதும் ஆரம்பிக்கிற வேல ஓரளவு கூட்டம் போனதும் முடிஞ்சிரும். கடைசில நல்ல சாப்பாடும் அடிக்கலாம்...''

மகாலிங்கம் சொன்னான். ''நான் வாரேன் பெரியவரே... எனக்குப் பரீச்சைக்குப் பீசு கெட்ட வழி இல்லாம என்ன செய்யிறதுன்னு கொழும்பிக்கிட்டிருந்தேன். நாலு நாளு கஷ்டப் பட்டா பைசா சேந்திடும்.. வரட்டா பெரியவரே?''

''இந்தக் காலத்துல இப்பிடி ஒரு பிள் ளையா? சரி வா வா...''என்றவர் ஆள் கிடைத்த உற்சாகத்தில் கதைத்தபடி நடக்க... உடன் நடந்தான்.

வெளியில் அப்படிச் சொல்லி விட்டா லும் மகாலிங்கத்தின் மனத்திற்குள் ஒரே கூச்ச மாக இருந்தது.

கல்யாண மண்டபத்தின் ஒரு மூலையில் ஒதுங்கி நின்று கொண்டு தன்னைத் தெரிந்தவர் கள் யாரும் கூட்டத்தில் தென்படுகிறார்களா என்று பார்த்தான். பெண்கள் பக்கம் சென்று இலை எடுக்கக் கூடாது என்று நினைத்தான். மனத்திற்குள் பயமும் கூச்சமும் போட்டி யிட்டன. அதையும் மீறின பரபரப்பு உடலை கிடுகிடுங்க வைத்தது.

பெரியவரைப் பார்த்தான். அவர் எந்தச் சிந்தனையும் இல்லாமல் வெற்றிலையின் பின் னால் சுண்ணாம்பு தடவிக் கொண்டிருந்தவர் அவன் பார்ப்பதை உணர்ந்து, ''என்ன மக்கா?'' என்று கேட்டார்.

அவர் மகனே என்று அழைத்தது ஆதரவாக

இருந்தது. அவன் நிலையை உணர்ந்ததைப் போல, "பயப்படாத... எங்கூட நீ சின்ன ஒத்தாச செஞ்சிக்கிட்டு நின்னாப் போதும் நான் பாத்துக்கிடுவேன்" என்றார்.

தலையசைத்தான்... யாரோ முதுகில் கைவைப்பதை உணர்ந்து திரும்பினான். சிறு வயதில் அவனுடன் படித்த ஒரு நண்பன் சிரித்தபடி...

"என்னடா மகா ஒதுங்கி நிக்கிறே?"

"நான்... வந்து..."

"இப்ப என்னடா செய்யறே?"

"படிச்சிக்கிட்டிருக்கேன்... எம்.ஏ. நீ என்ன செய்யறே?"

"சவுதில இருக்கேன்... வாயேன் உள்ள போவலாம்."

"வே...ண்டாம் சசி, நான் வரல்ல..."

"ஏன்?"

"நான் இங்க அழைப்பாளியா வரல்ல... உழைப்பாளியா வந்திருக்கேன்..."

"ஓ... என்ன வேல? மெனக்கெட்டு நின்னு எல்லாம் மேற்பார்வை பாக்குறியா?"

'இதென்ன சோதனை?' என்று மனத்திற்குள் நினைத்தாலும் வெளியே அலுத்துக் கொள்ள முடியாமல், "வந்து... வந்து..." என்று இழுத்தான்.

"என்னப்பா தெணறுறே? இலை பொறுக்க வந்தேன்னுதான் சொல்லேன்..." என்றார் அருகிலிருந்த பெரியவர்.

"என்னடா மகா இது?"

"ஆமாம்பா, நான் அதுக்குத்தான் வந்தேன்..." என்று மேலே பேச்சைத் தொடருமுன், "எலப் பொறுக்கியா?" என்றவன் தீண்டத்தகாதவனைப் பார்ப்பது போல பார்த்து விட்டு அகன்றான். 'சுருக்'கென்றது.

பந்தி வைத்து சாப்பிட்டு முடிந்தது. "வா வா இந்தக் கடவத்துல ஒரு பக்கத்தப் பிடிச்சிக்க. ரெண்டு பக்கத்துலயும் எல இருக்குது. நீ ஒரு பக்கத்துல எடு, நான் ஒரு பக்கம் எடுக்கறேன்..." என்றபடி கிளம்பினார்.

நிமிர்ந்து யாரையும் பார்க்காமல் தன் பணியை ஆரம்பித்தான் மகாலிங்கம். கண்ணில் கண்ணீர் பெருகியது. தோள் பக்க சட்டையால் துடைத்துக் கொண்டான்.

பெரும்பாலான இலைகளில் எல்லாம் சோறு மிச்சம் வைக்கப்படிருந்தது. பரிமாறுபவன் வைப்பது முழுவதையும் தின்றுவிட்டால் அருகிலிருப்பவன் மதிக்க மாட்டான் என்பதற்காக நுனிப்புல் மேய்ந்து விட்டுப் போயிருந்தனர்.

ஒரு பிடி சோற்றுக்கு வழி இல்லாமல் எத்தனையோ கோடி மக்கள் தவித்துக் கொண்டிருக்க, இம்மாதிரியும் வீணாக்குகிறார்களே என்று வேதனையாக இருந்தது. இலைகளைப் பொறுக்கிவிட்டுப் பழைய சணல் சாக்கால் மேசையைத் துடைத்துவிட்டு ஒதுங்கிக் கொள்ள...

வேலை முடிந்தபோது, "நமக்கும் ஒரு வாய் சாப்பிடலாம் வாப்பா" என்றழைத்தார் பெரியவர்.

வீட்டு நினைவு வந்தது. தயங்கித் தயங்கி அமர்ந்து உண்டான். அவனுக்குமாகச் சேர்த்து அவர் சம்பளம் வாங்கிக் கொண்டு வந்து பிரித்துக் கொடுத்தார்.

"அந்தப் பய வந்திருந்தா இருபத்தஞ்சி ரூபாக் கொறைச்சிக் குடுப்பேன். ஒனக்கு நான் கொறைக்கல்ல... படிப்புக்காவ இந்த வேலைக்கு



**'எந்த வேலையையும் நாளைக்கு என்று ஒத்திப் போடாமல் இன்றே செய்ய வேண்டும் என்று சொன்னது தப்பாப் போச்சு"**

***"அதுல என்ன தப்பு?"***

**"அட்டெண்டென்ஸ்ல நாளைக்குப் போட வேண்டிய கையெழுத்தை இன்னிக்கே போட்டுடறாங்க!"**

**- தேனி முருகேசன்**

வந்தவன் நீ...."

"நாளைக்கு வேலை ஏதாவது உண்டா ஐயா?"

"நாளக்கிப் பகல்லயாக்கும் வேல... வர முடியுமா உன்னால?"

"வாறேன்..."

"சரி பத்துப் பதினொண்ணரைக்குப் போல இங்க வந்திரு..."

திரும்பியவனைக் கூப்பிட்டு, "சோறு கறி எல்லாம் மிச்சம் கெடக்குது. கொஞ்சம் வீட்டுக்குக் கொண்டு போறியா மக்கா?" என்று கேட்டவர், அவன் பதிலை எதிர்பாராமலே இலைகளில் எடுத்து பிளாஸ்டிக் கூடுகளில் போட்டு...

"கறிக்கு ஒண்ணுமில்லியே" என்றபடி அவ

ணைப் பார்த்தவர், சோற்றிலேயே சாம்பாரும் பருப்புக் கறியும் விட்டு....

அவன் வயிறு நிறைந்தது போல் வீட்டிலுள்ளவர்களின் வயிறும் நிறைவதை எண்ணி மகிழ்ச்சியாக இருந்தது.

**வீ**ட்டிற்கு வந்தபோது பன்னிரண்டு மணியாவது இருக்கலாம்.

"இத்தன நேரம் எங்க போன? மனசுக்கு எப்பிடி இருந்தது தெரியுமா? இப்பத்தான் போய் சாய்ஞ்சேன்... வா சோறு தின்னு...."

"வேண்டாம்மா... நான் சாப்பிட்டுட்டேன்.." என்றவன் ஓரமாக வைத்திருந்த பொட்டலத்தைத் தூக்கி நீட்டினான்.

"என்னது இது? மாமன் தந்தானா? பாத்தியா நான் சொன்னேன் இல்லியா? ஏதோ வீறாப்புல நாமதான் பெரிசா நெனைச்சோம். அவன் மனசுல அது ஒண்ணும் இல்ல..." என்று மேலே பேசிக் கொண்டே போன அம்மாவை அதட்டினான்.

"மாமன் செத்தான். செத்த நாயோட மோனப் பத்தி ஒண்ணும் பேசாதீங்க. எனக்கு வெப்புறாளமா இருக்குது..."

மிரட்சியுடன் பார்த்தாள். "பின்ன ஏதுல இது?"

"நான் சம்பாதிச்சது அம்மா... நான் எல பொறுக்கிச் சம்பாதிச்சது..." விவரத்தைச் சொன்னபோது அவனுக்கும் அழுகை வந்தது.

"நீ இப்படியா செய்த? பொன்னு மோனே... நாளைக்கு உன்ன அடுத்தவங்க எல பொறுக்கின்னு கேவலமாய் பேச மாட்டாங்களா?"

"எதுக்கு அம்மா கேவலம்? நான் எங்கயும் களவாணல்ல, ஏமாத்தல்ல, திருடல்ல, விபச்சாரம் பண்ணல்ல... பின்ன எனக்கு என்ன கேவலம்? யாரு எப்பிடிச் சொன்னா எனக் கென்ன?" என்ற போது திருமண மண்டபத்தில் பேசிக் கொண்டிருந்த இளம் வயது நண்பனின் நினைவு வந்தது.

நண்பர்கள் என்ன நினைப்பார்களோ? உடன் படிக்கும் பெண்கள் துச்சமாகப் பார்க்கலாம். பேராசிரியர்கள் இளப்பமாக எண்ணலாம். 'இலை பொறுக்கி' என்று தூற்றலாம்.

சுந்தரி? அவள் என்ன நினைப்பாள்? எல்லோரையும் போல் அவளும் நினைத்தால்? நினைத்துவிட்டுப் போகட்டுமே என்று மனதை அமைதிப்படுத்த முடியவில்லை. இரவு முழுவதும் தூக்கமின்றிப் புரண்டான். என்றாலும் மறுநாளும் தொடர்ந்து வந்த மூன்று நாட்களும் வேலைக்குச் சென்றான்.

கல்லூரிக் கட்டணம் கட்டினான்.

நண்பர்களைக் காணக் கூச்சமாக இருந்தது.

"என்னடா கல்யாண மண்டபத்துல நீ இல்லாம ஒரு கல்யாணமும் நடக்காதாமே..." என்று ஒரு நண்பன் கேட்டான்.

"அவன் இல்லேன்னா கல்யாண மண்டபம் நாறிடாது?" என்று மற்றொருவன் கேலி செய்தான்.

எல்லோரும் விந்தைப் பூச்சி போல் பார்ப்பது சிறிது நேரத்தில் பழகி விட்டது. குட்டக் குட்டக் குனிந்தால்தான் தொல்லை. எனவே உறுதியுடன் இருந்தான்.

மதியம் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, "எங்க எல எல்லாம் எடுப்பியாடா?" என்று ஒருவன் கேட்டான்.

"நீ காசு கொடுப்பியாடா?"

"ஓகோ... அஞ்சி பைசா எலயோட சேத்து வைக்கிறேன் எடுத்துப் போடச் சொல்லு..."

சிரித்தபடி, "உன் இலைய நான் எடுக்கிறதுல ஒண்ணும் கொறைஞ்சிடமாட்டேன். அதுல என்ன கௌரவக் குறைச்சல்? எல்லாரோட அப்பாவும் அம்மாவும் பணக்காரங்களா இருப்பாங்களா? கைகால வலிமையா வச்சிகிட்டு நாலு பேர்கிட்ட கையேந்தி படிக்கிறத விட உழைச்சிப் படிக்கிறதுல குறைவு ஒண்ணுமில்லியே? உங்கள்ல யார் யார் எலய நான் எடுக்கணும்? சொல்லுங்கப்பா எடுக்கிறேன்.." என்றான்.

ஒருவரும் பேசவில்லை.

கைகழுவி வெளியே வந்தபோது சுந்தரி நிற்பது தெரிந்தது.

அவர்கள் இருவரும் உறவினர்கள் என்று கல்லூரியில் பிரபலமாகவில்லை. சந்திப்பதும் இல்லை. தூரத்தில் கண்டாலும் ஒரு பார்வை, ஒரு சிரிப்புடன் விலகிப் போய் விடுவார்கள்.

இன்று இதோ... மனம் எரிந்தது. நண்பர்களைப் போல் அவளும் ஏளனம் செய்ய வருகிறாளா?

திரும்ப முயன்றவன், எதற்காகப் பயப்பட வேண்டும்? அவள் மனதையும் அறியலாமே... நின்றான்.

"அத்தான்...."

"எ...ன்ன?"

"அப்பா பணம் தராததும் கோழையாகிடுவீங்களோன்னு பயந்தேன். படிப்புப் பாழாயிடுமேன்னு வருத்தப்பட்டேன். எந்த வேலை செய்தாலாவது படிக்கணும்ன்னு நெனைச்சி துணிச்சலா நடந்துக்கிட்டதுல எனக்கு ரொம்ப சந்தோசம்..." என்றாள்.

அவள் முகத்தை, கண்களைப் பார்த்தான். அதில் இரு பவளங்கள் திரள்வதும், உதடுகள் துடிப்பதும் தெரிந்தது.

தன்னை கேலி செய்தவர்களின் வார்த்தைகளினால் புண்ணாகிப் போயிருந்த மனத்திற்கு இந்த வார்த்தைகள் மருந்தாக அமைவதையும் தன் மனம் இலேசாவதையும் உணர்ந்து சிலிர்த்த மகாலிங்கம், "சுந்தரி..." என்றான் மகிழ்ச்சியுடன்.

# குணமெ



பிருந்தாவனத்தில் 'நடந்த கால்கள் நொந்தவோ?' என்று திருமழிசையாழ்வார் கேட்கிறார்! பரமாத்மா நடனமாடியதோடு இல்லாமல் பாதம் நோகும்படியாக ஆநிரைகளின் பின் நடந்திருக்கிறான்.

பசுக்களின் பின்னால்தான் நடந்து போக வேண்டும் என்பது சாஸ்திரம். கறவைகளின் குளம்படி எழுப்பும் தூளி நம் மீது பட்டால் பரம பவித்ரம் உண்டாகிறது.

அப்படிப்பட்ட பசுக்களையெல்லாம் பரமாத்மா மேய்த்து, தன்னோராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான். பிருந்தாவனத்தில் அவன் வரும் அழகே அழகு! ஆண்டாள் அவனை வர்ணிக்கிறாள் :

மாலாய் பிறந்த நம்பியை
மாலே செய்யும் மணாளனை
ஏலா பொய்கள் உரைப்பானை
இங்கே போகக் கண்டீரே....

"-இதோ பிருந்தாவனத்திலே வருகிறான் பாருங்கள், பெரும் புளுகன்! அவனோடு பேசக்கூடாது என்று அடியோடு நினைத்தாலும், அவன் என்னை இழுக்கிறானே! இப்படி ஓர் ஈர்ப்பு சக்தி அவனிடத்திலே இருப்பதனாலே அவனை விட முடியவில்லையே..." என்கிறாள்.

இப்படி பகவான் பிருந்தாவனத்தில் சஞ்சாரம் பண்ணும்போது பிரும்மாவுக்கு ஒரு துராசை உண்டாகிறது - சதுர்முக பிரும்மா! அவர் என்ன பண்ணுகிறார்...? தம்முடைய மாயையினாலே கண்ணனை அடக்க வேண்டும் என்று தீர்மானம் செய்து, பகவான் மேய்த்துக் கொண்டிருக்கும் பசுக்கள் அத்தனையையும் கொண்டு போய் ஒரு குகையில் அடைத்து விடுகிறார். குகை வாயிலையும் மூடி விடுகிறார்!

பகவானுக்கு இது தெரியக்கூடாது; அவன் சிறிது நேரம் திண்டாட வேண்டும் - 'தன்னு

பத்மவாசன்

# ன்றுமில்லை 26

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

டைய மாயையினால் அவன் திண்டாட வேண்டும்' என்று தீர்மானம் செய்து எல்லா ஆநிரைகளையும் மாயமாக்கி விடுகிறார்!

இப்போது குழந்தையாக பிருந்தாவனத்திலே நடந்து கொண்டிருக்கிற பகவான், பின்னால் கீதாச்சார்யனாகி சொல்லப் போகிறான் : 'என்னுடைய மாயையைத் தாண்ட முடியாது' என உபதேசிக்கப் போகிறான். 'என் திருவடியை எவன் பற்றுகிறானோ அவன்தான் மாயையிலிருந்து விடுபட முடியும்' என்று அந்தக் குழந்தைதான் பிற்பாடு அழகாகப் பேசவிருக்கிறது- இப்படிப்பட்டவனைத்தான் தன் மாயையாலே அடக்க வேண்டும் என்பது பிரும்மாவின் எண்ணம்!

இதையெல்லாம் அறிந்த பரமாத்மா என்ன செய்தான்...?

பிரும்மா இப்படியெல்லாம் பண்ணுகிறார்; ஆநிரைகளையெல்லாம் அழகாகக் கொண்டு போய் ஒவ்வொன்றாகப் பிடித்துக் கட்டி வைத்



திருக்கிறார் என்றதும், பரமாத்மா நேராக பிரும்ம லோகத்துக்குப் புறப்பட்டுப் போய் விட்டான்.

பிரும்மலோகத்துக்குப் போனதினாலே அவன் இங்கே பூலோகத்திலே இல்லாமல் போய்விடவில்லை! பிருந்தாவனத்திலேயும் இருக்கிறான்; பிரும்ம லோகத்திலும் இருக்கிறான்!

பிரும்ம லோகத்துக்கு எப்படிப் போனான்...' அந்த பிரும்மாவின் வடிவத்தையே எடுத்துக் கொண்டு போனான். பிரும்மா மாதிரியே வேஷம்!

அங்கே வாசலில் துவார பாலகர்களைப் பார்த்தான் - அவர்களைக் கூப்பிட்டு - "இது கலியுகத்துக்குத் தோள் நீட்டுகிற துவாபர யுகம். நாம் இருக்கிற இந்த யுகத்தை அடுத்து கலியுகம் வரவிருக்கிறது. இப்படி கலியுகத்துடைய சேர்க்கை கிட்டே நெருங்கிவிட்டதாலே எங்கு பார்த்தாலும் ஏகப்பட்ட அக்கிரமம் நடக்கிறது. அதனால் யார் யாரோ பிரும்மாவாக வேஷம் போட்டுக் கொண்டு உலகத்தில் திரிகிறார்களாம். நிஜமான பிரும்மா நான் - இதோ பிரும்மலோகத்துக்குள்ளே போகிறேன். இனி, யாராவது பிரும்மாவாக வேஷம் போட்டுக் கொண்டு வரக்கூடும். அப்படி எவனாவது வந்தானானால், உதைத்துவிடுங்கள்..." - இதைச் சொல்லிவிட்டு பரமாத்மா உள்ளே போய்விட்டான்.

இவர் - அதாவது பிரும்மா - பூலோகத்தில் என்ன பண்ணினார்...? பசுக்களையெல்லாம் குகையில் அடைத்துவிட்டு, பகவானைத் தாம் ஜெயித்து விட்டதாக நினைத்துக் கொண்டு பிரும்ம லோகத்துக்கு வருகிறார்...!

துவார பாலகர்கள் பார்த்தார்கள்: 'இப்போதுதானே உள்ளே போனார் பிரும்மா? அவர் சொல்லிவிட்டுப் போனது சரியாகப் போயிற்று! இப்படி அவராகவே வேஷம் போட்டுக் கொண்டு ஒருவன் வந்திருக்கிறானே...' என்று எண்ணி, இருவரும் சேர்ந்து பிரும்மாவை அடிக்க ஆரம்பித்தார்கள்.

"நான்தான் பிரும்மா; நான்தான் நிஜமான பிரும்மா" என்று அவர் சொல்லித் தப்பித்துக் கொள்வதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது - பிரும்ம பிரயத்தனமாகிவிட்டது! பிரும்ம பிரயத்தனம் என்ற சொல் வந்தது இந்த நிகழ்ச்சியிலிருந்துதான்!

தான்தான் பிரும்மா என்று சொல்லித் தப்பிப்பதற்குள் அவ்வளவு அவஸ்தைபட்டுப் போனார் பிரும்மா! அப்போது அங்கேயிருந்தபடி பரமாத்மா வேணுகானம் செய்கிறான்.

ஒரே ஆச்சர்யமாக இருக்கிறது! எத்தனை பசுக்கள்! எத்தனைவித கன்றுகள்! அந்த இடை ஜாதி மக்கள், அவர்கள் உடுத்தியுள்ள கம்பளி, அவர்கள் கையில் வைத்துள்ள கம்பு, ...பரமாத்மாதானே இவை எல்லாமாய் ஆகிப் போனான்! பிரும்மா பூலோகத்தில் அடைத்து வைத்தவையெல்லாம் அப்படியேதான் இருக்கின்றன... ஆனால் இங்கேயோ, கோஷ்டியாக அப்படியே அத்தனை பசுவும் அவனைச் சூழ்ந்துள்ளன!

இவனே - பரமாத்மாவே எல்லாமாய் ஆனதைக் கண்டு, நடுநடுங்கிப் போனார் பிரும்மா.

"ப்ரபோ! தேவ தேவ ஜகத்பதே! சர்வாத்மன், விச்வாத்மன், பரமாத்மன், விச்வபரவனா...! நீ விச்வமாக இருப்பதை நான் பார்க்கிறேன்.

கன்றாகவும் இருக்கிறாய்
பசுவாகவும் இருக்கிறாய்
மேலே போட்டிருக்கும் கம்பளியாகவும் இருக்கிறாய்..." என்று புலம்புகிறான் பிரும்மா.

ஏகப்பட்ட வாத்ஸல்யம் கன்றுக்கும் பசுவுக்கும்! கன்றிடம் பசு காட்டும் அன்பை மட்டுமே வாத்ஸல்யம் என்று சொல்வார்கள். ஆனால் இன்றைக்கு அதுவே பரமாத்மாவிடமிருந்து இன்னும் அதிகமாகப் பிரவகிக்கிறது. அப்படி அவன் சர்வாந்தர்யாமியாக நின்று, தனி கிருஷ்ணனாகவும் நின்று, அங்கே பிரும்மாவாகப் போய், இப்படி நின்றதைப் பார்த்தால்....

பரமாத்மா சர்வ வஸ்துக்களிலும் தான் இருப்பது உண்மை என்பதை இங்கே நிரூபித்தான்.

இப்படிக் கூட சம்பவிக்குமா என்று ஒரு கேள்வி. பகவான் இப்படி சர்வ பதார்த்தங்களிலேயும் இருக்க முடியுமா...? என்று ஒரு விஷய விசாரம் பண்ணும்போது, அதற்கு ஒரு பதிலை ஆசார்யர்கள் சொல்கிறார்கள் :

"நாம் கூட அந்த பகவானை உபாஸனை பண்ணினோமானால், தவத்தினாலேயும் யமனியமப்ராணாயாம, ப்ரத்யாஹார தார த்யான தாரண ஆஸன சமாதி என்கிற அந்த நிலையிலே - உத்தமமான நிலையிலே - இப்படி அஷ்டாங்க யோகம் செய்து பகவானை தியானம் பண்ணினால்... பகவானுக்கு இருக்கிறதே - இப்படி எல்லா வஸ்துக்களிலும் பரவி நிற்றல் என்கிற நிலை - அதிலே கொஞ்சமாவது நாமும் சம்பாதிக்கலாம். நம்மாலும் அது முடியும்!"

அவனே சஹஸ்ரமாக, சதமாக, அபரிமிதமாக இருக்கிறான். - இதெல்லாம் எண்ணிக்கையைச் சொல்வதல்ல... அபரிமிதத்தைச் சொல்வது.

ஒருவரை 'சதமானம் பவது' என்று ஆசீர்வாதம் பண்ணினால் 'நூற்றியோராவது வயதிலே நீ புறப்பட்டுப் போய்விட வேண்டும்!' என்று அர்த்தமில்லை! பல்லாண்டு பல்லாண்டு அப்படியே இருக்க வேண்டும் கால வரையறை இல்லாமல் அபரிமிதமாய் இருக்க வேண்டும் என்று பொருள்!

பரமாத்மா இப்படித்தான் அபரிமிதமாய் இருக்கிறான். சர்வ வியாபியாக இருக்கிறவன் அவதார காலத்திலேயும்கூட விராட் ஸ்வரூபனாய்ப் பரவியிருக்கிறான்.

(தொடரும்)

# மாமி, அவர் ஆபீஸிலிருந்து வந்ததும் சாவிய அவர்கிட்ட கொடுத்துடுங்க !

A UNIT OF
HARI
AGENCIES



போகும் போது எங்க போறேன்னு கேட்கக் கூடாது ... இருந்தாலும்...

நீங்க கேட்கறதுக்கு முன்னாடி நானே சொல்லிடறேன் மாமி ! மயிலாப்பூர் லஸ் கார்னரில் இருக்கும் ஹரிப்பிரியாவுக்குத் தான் போறேன். ஹரிப்பிரியா பெண்களுக்கான பிரத்யேக ஆடை உலகம். அங்கே பெட்டிகோட்ஸ், சுரிதார்கள், பேண்மஸ், பிராக்கள், நைட்டீஸ், மாக்ஸிகள், கைக்குட்டைகள் எல்லாம் ஏராளமான வகைகள் தாராளமாக கிடைக்கிறது.



நம்ம பட்ஜெட்டுக்கு தகுந்தாப்ல வாங்கணும்னா ஹரி ஏஜென்ஸியோட அங்கமான ஹரிப்பிரியா மட்டும் தான் போகணும்.

சித்த நாழி இருக்கியா ? நானும் கதவை பூட்டிண்டு பக்கத்தாத்தில சாவிய கொடுத்துட்டு வந்திடறேன்.




## ஹரிப்பிரியா

பெண்களுக்கான பிரத்யேக
ஆடை உலகம்

111, முதல் மாடி, கச்சேரி சாலை,
சென்னை - 600 004.
போன் : 4942368.

# மனமாயை

குழம்பு ஊற்றிப் பிசைந்த சோற்று வட்டிலில் விரல்களை ஊன்றியவாறு வெறித்தாள், விஜயம். சாப்பிடத் தோன்றவில்லை. முதல் கவனத்தைக் கூட எடுக்கவில்லை. மனசில் ஏதோ நினைவுகள். உஷ்ணமாய் தகிக்கும் கொதி நினைவுகள்.

வாசலுக்கு வெளியே வீதி வெயிலையே வெறித்தாள். இமை தட்டாத பார்வை. நிலைத்த பார்வை. வேறு எங்கோ 'பார்த்து'க் கிடந்தது, மனசு.

"அந்தப் பயலா... அப்படிச் சொன்னான்? அப்படிச் சொல்லணும்னா நெஞ்சுலே எம்புட்டுத் திமிர் இருக்கணும்? அவன் நாக்கை அறுத்து தெரு நாய்க்கு எறிய வேண்டாம்? நாசமாய்ப் போற அந்தப் பாவி வாய்லே புத்து பெறப்பட...! ஒருநாள் பேதியில் பாடையிலே போக!"

சத்தமில்லாமல் அவள் உதடுகள் முணு முணுத்தன. கோபக் கொதிப்பும் குலை கொதிப்புமாய் சீறித் தெறித்த வார்த்தைகள். வார்த்தைக் கங்குகள்.

விஜயத்துக்கு சாப்பிடவே பிடிக்கவில்லை. எதுவும் செய்யத் தோன்றவில்லை. மனம் முழுக்க குருட்டுக் கோபத்தில் விறைத்துக் கிடந்தது. 'என்ன செய்ய' என்று யோசிக்கக் கூட இயலாமல், விரக்தியின் விளிம்பில் உறைந்து கிடக்கிற மனசு.

கூலி வேலைக்குப் போக வேண்டியவள். நாராயணசாமி நாயக்கர் தோட்டத்திற்கு பருத்திக்குள் களை வெட்ட வருவதாக ஒப்புக் கொண்டிருந்தவள்தான்.

எட்டு மணிக்குள் 'வேலைக்குப் புறப்படணுமே' என்று பரபரத்துப் போய் வேலை பார்த்தாள். அடுப்பு வேலை, அது இது என்று சில்லறை வேலைகள். ரெக்கையடித்துப் பறக்கிற அவசரத்தில் இயங்கிக் கொண்டிருந்தாள்.

அப்போதுதான் -

இந்தத் தீ வந்து செய்தியாகக் காதில் விழுந்தது. வேலக்கா வந்து என்னவோ கூற ஆரம்பித்தது: இந்தத் தீயை கொட்டிவிட்டுப் போனாளே [illegible] தீ. மனசு முழுக்க பற்றி எரிந்தது. [illegible] விட்டெரிந்தது உடம்பும மனசும் கிடந்து தகித்தது.

'சோற்றையள்ளி வாயில் போட்டு விட்டு வேலைக்குப் பறக்கணும்' என்ற பரபரப்பில் இருந்த விஜயம்... ரெக்கையில் கல்லெறி பட்ட பறவையாக விழுந்து கிடந்தாள். அவளைத் துடிக்க வைத்தது. அவமானத்திலும் அருவருப்பிலும் மனசே கூசிக் குறுகியது. யாரோ தன்னை மலத்தில் தள்ளி விட்டதைப் போன்ற அருவருப்பு. வெறுப்பு, கசப்பு.

அப்போதுதான் -

"வேலைக்குப் போவமா? வாரீயா?"



என்று கேட்டுக் கொண்டு களை கரண்டியும் தூக்குச் சட்டியுமாக வந்தாள், ராஜம்.

இவள் முகமே எதுவோ மாதிரி விகாரப்பட்டிருந்தது. வெப்ப நீரில் நனைந்த இமை ரோமங்கள். வெட்டுப்பட்ட பல்லி வாலாக அடி உதட்டில் ரணத்துடிப்பு. மனசுக்குள் எரிகிற தீயின் வெக்கை, முகத்திலும் அனல் வீசியது.

ராஜம் திகைத்துப் போனாள். எதுவும் தப்பாகக் கேட்டு விட்டோமா என்று தடுமாறினாள்.

"என்ன.. விஜயம், நாராயணசாமி நாயக்கரு புஞ்சைக்கு வர்றதாகத்தானே இருந்தே?"

"ஆமா..."

"வரல்லியா?"

"வரல்லே..." வறண்ட குரலில் எரிந்து விழுந்தாள்.

"ஏன்... வரல்லே? வாரேன்னு சொல்லி, நம்ப வைச்சுட்டு, கடைசி நேரத்துலே வரல்லேன்னு சொன்னா, எப்படி? வையமாட்டாரா நாயக்கரு?"

"வையட்டும்... நல்லா வையட்டும்! சின்னப் பய அல்பப்பயலெல்லாம் நாக்குலே நரம்புல்லாமே என்னைக் கேவலப்படுத்தறப்ப.. பெரிய மனுசரு நாயக்கரு வையுறது பெரிய விஷயமா? வையட்டும். நா வரல்லே."

விஜயத்தின் சீற்றம், சீறிச் சினந்து தெறித்த அனல் சொற்களுக்குள் புதைந்து கிடந்த மன வேதனை. ஒரு சோகம். குத்துண்ட புண்ணின் வலி.

ராஜத்துக்கு விஜயத்தைப் பார்க்கவே பாவமாக இருந்தது. இதற்கு மேல் கிண்டிக் கிளற விரும்பவில்லை. 'நொந்த புண்ணை நோண்டக் கூடாது' என்கிற கிராமத்து நாகரீகம்.

"சரி... அப்ப... நா போறேன்."

ராஜம் போய்விட்டாள். விஜயத்துக்குள் செயலற்ற நிலை. செயல்பட முடியாமல் மரத்து, மந்தித்துப் போன மனநிலை.

வெறிக்கிற வெயில். இளமதியத்தை நோக்கி முகம் வெளுத்து, நிறம் மாறுகிற வெயில். வெப்பமாகிற வெயில்.

போன வருஷம் நிகழ்ந்த புருஷனின் மரணம். கிணறு வெட்டுகிற வேலைக்குப் போயிருந்தான், வேல்ராஜ். கருங்கல் கிணறு. வேட்டு வைத்து வெடிக்கச் செய்து... சிதறும் கற்களை நொறுக்கி.. கூடையில் அள்ளி வெளியேற்றுகிற வேலை.

**மேலாண்மை பொன்னுச்சாமி**



● ஒவ்வொருவரும் நம்மை அதிபுத்திசாலி என்று நினைத்து கொள்கிறார்கள். இந்த உலகிலே இத்தனை முட்டாள்கள் இருப்பதற்கு இதுதான் காரணம். — ஹங்கேரிய பழமொழி

தகவல் : ஆர். லோகநாதன்

ஏதோ ஒரு வேட்டு. வெடித்ததில் ரொம்ப உயரத்துக்கு நாலாதிசைகளிலும் சிதறித் தெறித்த கருங்கல் துண்டுகள். அதில் ஒரு துண்டு... இவன் தலையில் விழ -

ரத்த மழையில் நனைந்த பிரேதமாகத் தூக்கிக் கொண்டு வந்து போட்ட நாலைந்து கூலியாட்கள்.

மூன்று வயதுக் குழந்தையோடு இவள் வெடித்துச் சிதறி அழுத அழுகை. தலைவிரி கோலமாக நெஞ்சில் அடித்துக் கொண்டு கதறிய கதறல். அறுத்துப் போட்ட கீரைத்தண்டாக வாடிக்கிடந்த அவலக்கோலம். வாழத் துவங்கிய பருவத்திலேயே வாழ்க்கையையும், தாலியையும் பறி கொடுத்த பரிதாபம். வாழ்க்கையாகவே வந்து அப்பிக் கொண்ட சாஸ்வதச் சூன்யம்.

ஊர்ஜனம் அவளைப் பார்த்து கண் கலங்கியது. பேதலித்துப் புலம்பியது. "ஐயோ, ஐயோ..." என்று கதறிப் புலம்பியது. யார் புலம்பி, என்ன செய்ய? மிச்சமிருக்கும் நாட்களை பிழைத்துத் தீர்க்கணுமே.

பிள்ளையை அரைக் கிளாஸுக்கு அனுப்பி விட்டு கூலி வேலைக்குப் போனாள். வேற வழி?

"அந்த ஒழுக்கசீலன் ஜீவன் உசுரோட இருந்துருந்தா... இந்த நாய்ப் பயலுக்கு இந்த நெனப்பு வந்துருக்குமா? இப்படிப் பேசியிருப்பானா? பேசுற தைரியம் வந்துருமா? நாக்கை அறுத்துப் போட்டிருப்பாரே... அந்த நாயகன்."

இறுக்கம் உடைந்த மனசின் நெகிழ்வு. கணவன் நினைவில் இன்றைய வெறுமையின் தகிப்பு. நாதியற்ற பலவீனம். சுய பரிதாபம்.

உடைந்து கசிந்தாள். விசும்பி விசும்பி அழுதாள். யாருமற்ற தனிமை. சுதந்திரமாக அழுதாள். குமுறிப் பீறிட்டு வந்த உணர்வுக்கற்றை உதடுகளில் ஒரு வெடிப்போடு வெளிப்படுகிறது. கண்களில் குத்தலெடுக்கிற நீர். மடை விலகி வழிகிற கண்ணீர்.

...வேல்ராஜ் நல்ல சிவப்பு. கடுமையான உழைப்பாளி. அவனைக் கண்டாலே வேலி மரம் தலை வணங்கும். கருங்கல் பாறை நடுங்கியதிரும். புஜச்சதை உருளும். திரளும். வைரம் பாய்ந்த இறுக்கம். அவனது உள்ளங்கையே மரப்பலகை மாதிரி சொரசொரப்பாக இருக்கும்.

விஜயத்தின் மீது அவன் கொண்டிருந்த காதல். அவளுக்காக ஆறுமாசம் காத்திருந்து தாலி கட்டிய காதல் பொறுமை.

விஜயமும் ரொம்ப லட்சணம். கரிசல் காட்டுக்குச் சம்பந்தமில்லாத செவல் மண்ணைப் போல... அந்தக் கிராமத்தை மீறிய லட்சணம். அரைத்துக் குழம்பிய மஞ்சளின் நிறம். குழைவு. கனிவு. கச்சிதமான முகம். கண்ணில் ஒரு மின்னல். கனவைக் குழைத்துப் பூசிய மாதிரியான பூமலர்ச்சியான முகம்.

அவனோடு வாழ்ந்த அஞ்சு வருஷ தாம்பத்யம்.

அவனது லட்சணத்தின் மேல் இவளுக்கும் கொள்ளை மோகம். அவனை விட்டுப் பிரிந்திருக்க மனசிருக்காது. வேலைக்குப் போய் விட்டு வருகிற அவனுக்காக ஒரு தவிப்போடும் தகிப்போடும் காத்துக் கிடப்பாள். மனசு கிடந்து துடிக்கும். திரேகத் தவிப்பு.

அவனது அன்பு. உஷ்ணமான மோகிப்பு. மோகம் நிறைந்த அணைப்பு. மூர்க்கமான தழுவல், இறுக்கம். இறுக்கத்துக்குள் அவனது உணர்ச்சிப் பிரவாகம். அவனது பரபரப்பு. அவசரம். அதன் பரவசம். பரவசத் திணறல். திணறலில் மூர்ச்சையாகிப் போவாள், பல சமயங்களில்.

அவனது மூர்க்காவேசத்தில் இவள் நிலை குலைந்து விடுவாள். இன்பமான குலைவு. தினைப்பான சுகத்தின் பரவசக்குலைவு. நினைத்து நினைத்து ஏங்க வைக்கிற குலைவு.

நிலை குலைந்து... சரிந்து.. முழுசாகத் தோற்று... அடித்துப் போட்ட மாதிரி கிறுகிறுத்துக் கிடப்பதில் அவளுக்கொரு பரவசம். தேனுக்குள் சிக்கின எறும்பின் திளைப்பு.

அவன் செத்த பிறகும் கூட.....

பல இராத்திரிகளில் அந்தச் சுகத்திளைப்பை நினைத்திருக்கிறாள். நடுச்சாமத்தில், அந்த மூர்க்கத் தழுவலின் நெறு நெறுப்பை உணர்ந்த மூச்சுத் திணறிப் பதறிப் போய் விழித்திருக்கிறாள். அப்படிப் பல ராத்திரிகள். பல கனாக்கள். பரவசக் கனாக்கள்.

விழித்துப் பார்த்தால்...

கனத்த இருட்டும், தகிக்கும் சூன்யமும்.

அந்தக் கணங்களில்தான் வேல்ராஜின் மரணம், எத்தனை கொடிய இழப்பு என்ற நிஜத்தின் முழுமை. அவளை மூர்க்கமாய்த் தாக்கும்.

அதே போல்.. இப்போதும் -

ஒன்றுக்கும் உதவாத ஒரு நாய்ப்பயல். கால் தூசிக்குக் கூடப் பெறாத அற்பன். பல்லில் நாக்கைப் போட்டுப் பேசியிருக்கிறான் என்று கேள்விப்படுகிற போது...

அந்த ஒழுக்கசீல உயிரின் அருமை இவளுக்குள் மலையாய் உயர்ந்து, சமுத்திரமாய் விரிந்து...

"ஐய்யோ.. எந் தங்கப் பெட்டியை தூக்கிக் குடுத்துட்டேனே... ஏ ராசா... எங் காவல் தெய்



# Spictex ®

மென்மையான
சுகானுபவம்...
மேன்மையான
பொருத்தம்...
உங்களுக்காகவே !



எண்ணத்தை
சுண்டியிழுக்கும் கண்கவர்
வண்ணங்களில்,
மனதை கவரும்
நாகரீக வடிவங்களில்,
கொள்ளை கொள்ளும்
எல்லையில்லா
டிசைன்களில்.

**பாண்டீஸ்
மற்றும்
சிம்மீஸ்**

அனைத்து மங்கையரின்
அளவுகளுக்கு ஏற்ப கிடைக்கிறது.



# Spictex ®

ஸ்பிக்டெக்ஸும், நீங்களும்
**பொருத்தமான ஜோடி !**

**சிம்மீஸ் ரகங்கள் :-**

- *சிட்டி கேர்ள் சிம்மீஸ்*
- *சுடி லேஸ் சிம்மீஸ்*
- *சுடி சிம்மீஸ்*
- *மிடி சிம்மீஸ்*
- *ஹாஃப் சிம்மீஸ்*

ஆடவர் மற்றும் குழந்தைகளுக்கான உள்ளாடை தயாரிப்பிலும் முன்னோடிகள்.

ஸ்ரீ அன்னையே துணை

# இந்த ஆண்டுத் தீபாவளியை மேலும் மகிழ்ச்சியுடன் கொண்டாடுங்கள்

**உங்களுக்கென்று ஒரு பண்ணை நிலம் வாங்குங்கள் - அதில்
மாமரக்கன்றுகளை நட்டுப் பலனடையுங்கள்**

● சென்னை - காஞ்சிபுரம் மார்க்கத்தில் வாலாஜாபாத் அருகே பாலாற்றங்கரையில் ஸ்ரீ அன்னை ஆர்ச்சர்ட்ஸின் நன்றாகப் பண்படுத்தப்பட்ட பண்ணை நிலம் 2400 ச.அடி அல்லது 5 சென்ட் விலை ரூ30,000 மட்டுமே. முழுத் தொகையையும் மொத்தமாக செலுத்துபவர்களுக்குப் பத்திரப் பதிவு இலவசம்.

● ஒவ்வொரு 5 சென்ட் நிலத்திலும் ஏற்றுமதிக்குப் பயன்படும் 6 உயர்தர மா மரக் கன்றுகள் நடப்படும். அதை ஐந்து வருடங்களுக்கு நாங்கள் எங்கள் செலவில் பராமரித்துப் பலன் தரும்படி செய்வோம். எல்லைக் கல்லுக்கு அருகே இரண்டு தேக்கு மரக் கன்றுகள் நட்டு வளர்த்துப் பராமரித்துத் தரப்படும். அதன் பலனும் தங்களுக்கே. தேக்கு மரங்களின் பிற்கால மதிப்பை நீங்கள் நன்கு அறிவீர்கள்.

**விவசாய வருமானத்திற்கு வருமானவரி விலக்குண்டு. உங்கள் குடும்பத்திற்கும் உங்கள் சந்ததியினருக்கும் பலன் கிடைத்துக் கொண்டிருக்கும்.**

மூன்று ஆண்டுகளிலேயே நிலத்தின் மதிப்பு 3 மடங்கு உயர்ந்துள்ளதை நீங்கள் அறிவீர்கள். பிற்காலத்தில் உங்கள் நில மதிப்பு மேலும் உயரும்.

முழுத் தொகையையும் மொத்தமாக் செலுத்த இயலாதவர்கள் மாதம் ரூ750 வீதம் 40 மாதங்கள் செலுத்திப் பண்ணை நிலச் சொந்தக் காரர்களாகலாம்.

**முதல் தவணை செலுத்திய உடனேயே உங்கள் நிலத்தில் மாமரக் கன்றுகள் நடப்பட்டுப் பராமரிக்கப்படும்.**

● தீபாவளிக்குள் பண்ணை நிலம் வாங்குபவர்களுக்கு விலையில் 10 சதவீதம் சிறப்புத் தள்ளுபடி உண்டு (1-11-97 வரையிலும் ஏற்கப்படும்)

**ஒரு *சின்ன இலாபக் கணக்கு:***

**விவசாய நிபுணர்கள் நிலத்தின் செழிப்பைப் பார்வையிட்டுக் கூறிய ஆலோசனையின்படி 5 சென்டில் 6 மரங்கள் நடலாம். ஆண்டு ஒன்றுக்கு 1 மரம் சுமார் 200 பழங்கள் காய்க்கும். 1 வருடத்தில் 6 மரங்கள் 1200 பழங்கள். ஒரு பழம் விலை சுமார் ரூ10. (இன்றைய விலை) ஆக ஓராண்டிற்கு விற்பனை வருவாய் ரூ12,000. உங்கள் முதலீட்டிற்கு எவ்வளவு சதவீதம் ஆதாயம் என்று கணக்கிட்டுக் கொள்ளுங்கள்!**

**முழு விவரங்களுக்கு உடனே தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:**

**Annai Orchards (P) Ltd.**

C1, Bhagyam Palace, (I Floor)Puliyur I Lane,
II Main Road, Trustpuram, Kodambakkam, Chennai- 600 024.

தொலைபேசித் தொடர்பு: காலை 11 முதல் 1 வரை **4818435**

(மாவட்டம் தோறும், அனைத்து ஊர்களிலும் கமிஷன் அடிப்படையில் விற்பனை செய்ய ஏஜண்டுகள் தேவை.)

வமே... என்னைவுட்டுட்டுப் போய்ட்டீகளே.. நாதியத்த சிவனா என்னைத் தவிக்கவுட்டுட்டு.. சாவோட சேர்ந்து போறதுக்கு எப்படி மனசு வந்துச்சு?"

நெஞ்சுக்குள் முட்டிக் கொண்டு வந்த அழுகை. தாங்க முடியாமல் வலது தோளில் முகத்தைப் புதைக்கிற விஜயம். ஒப்பாரியும் புலம்பலுமாய் அழுது கசிகிற அவள். கண்ணி லிருந்து சிந்திச் சிதறுகிற கண்ணீர், உலர்ந்து கொண்டிருந்த வட்டில் சோற்றில் தெறிக்கிறது.

.... விடிந்து கொஞ்ச நேரம்தான் ஆகியிருந் தது. மஞ்சள் வெயிலின் நிறம் இன்னும் மாற வில்லை. அடுப்புக்கு விறகு இல்லையே என்று வெளியே போய் எடுத்து வந்தாள், விஜயம்.

விறகுகளை அடுப்பில் சொருக.. கொழுந்து விட்டெரிகிற தீ. தீயின் சந்தன நிறம், அவள் கால்சதையில் விழுகிறது. கால்சதையின் மஞ் சள் ஜ்வலிப்புக்கு முன்னால் நிற்க முடியாமல், தீயின் நிறம் தோற்று முகம் மங்கியது.

அப்போதுதான் -

வேலக்கா வந்தாள். ஏதோ விஷயம் பேச வந்தவளைப் போல 'வளா, வளா'வென்று அதை, இதைப் பேசினாள். விஜயத்துக்குள் வெறுப்பாக இருந்தது. கண்ணில் கூட மன எரிச்சல் லேசாக மின்னியது. இருந்தாலும் முகத்தாட்சண்யத்திற்காக பல்லைக் கடித்துக் கொண்டு சிரித்த முகம் காட்டினாள். 'ம்' கொட்டினாள், அரைமனசாக.

வேலக்கா 'ஒரு மாதிரி' என்று ஊர் முழுக்க தெரிந்த விஷயம். தகாத உறவுகள் - முறை கேடான சேர்க்கைகள் கள்ளப்பறவைகள் - என்று நடக்கிற ரகசிய இழிவுகளுக்கெல்லாம் துவக்கப் புள்ளியாக தூதாக இருந்து, பாலமாக விளங்குபவள்.

இவள் வீட்டுப்படி ஏறி, நின்று பேசு வதையே அருவருப்பாக உணர்ந்தாள், விஜயம். வெளிக்காட்ட முடியாமல் உள்ளுக்குள் குமைந் தாள்.

அப்போதுதான் -

பேச்சோடு பேச்சாகப் பேசுவதைப் போல.. ரொம்ப இயல்பாக, அந்தத் தீப் பந்தத்தை வீசி னாள், வேலக்கா.

"அடிக்கடி.. அந்த வேப்பமரம் பக்கமாப் போவியோ?"

"ஆமா... கடைக்குப் போறப்ப... தண்ணிக் குப் போறப்ப அந்த வழியாப் போவேன். அதுக் கென்ன?"

"அங்க நடராசன் உக்காந்திருப்பானோ?"

"யாரு? அந்த புதுப் பணக்காரனா? வட்டிக் குக் கடன் குடுத்து வாங்குறதை பொழைப்பா வச்சிருக்கானே... அவனா?"

"அந்த எளவட்டந்தான்."

"அதுக்கென்ன?"



"பக்கத்து வீட்டுக்காரிக்கு பந்தா ஜாஸ்தி!"

"என்ன விஷயம்?"

"புகழ்ந்து பேசினாலும் எந்த சாமான் களும், இரவல் தரப்படமாட்டாது'ன்னு கதவுல நோட்டீஸ் ஒட்டிருக்கா!"

— அம்பை தேவா

"ஒறங்குதுக்குக் கண்ணை மூடுனா... நீதான் கனாவுலே வாரியாம். அப்புறம் ஒறக்கமே வார தில்லியாம். ஒம் மேலே அப்படிச் சொக்கிப் போய்... இருக்கானாம்."

தீப்பந்தத்தால் முகத்தில் அறைந்த மாதிரி யிருந்தது, விஜயத்துக்கு. வெலவெலத்துப் போனாள். 'இப்படி ஒரு மலப் பேச்சு முகத் துக்கு நேராக வந்து விழும்' என்று கனாக்கூட கண்டதேயில்லை அவள். அத்து மீறலான அருவை. கற்பனை செய்ய முடியாத அரு வருப்பு.

"அடி செருப்பாலே... நாயை" என்று பீறிட்டு வந்த உணர்வுப் பொறியான வார்த்தை களைக் கூட சொல்ல வாயில்லாமல்.. ஸ்தம்பித் துப் போய்விட்ட விஜயம். மனம் முழுக்க தகிப்பு. திரேகமே பற்றி எரிகிற மாதிரியான தோர் தகிப்பு.

வந்த கடமை முடிந்ததென்று போய்விட்ட வேலக்கா.

விஜயத்தால் நிற்கக் கூட முடியவில்லை. திரேகமே நடுங்குவதைப் போலிருந்தது.

'நா வேணும்னா லட்சணமாப் பொறந் தேன்? லட்சணமா இருந்து தொலைச்சுட்டா... அதுக்கு நா என்ன செய்ய? இந்தப் பாவியோட கொள்ளிக் கண்ணுலே படணும்னா... வேப்ப மரம் வழியாப் போறேன்? இந்தச் சின்னப்பய சில்லறையைப் பாத்து சிரிக்க மயக்கவா, அவன் முன்னாலே போறேன்? அந்தச் சின்ன நாயி சில்லறை... என்னோட கெண்டைக்காலுலே ஒட்டுற புழுதிக்குச் சமானம். த்தூ!'

நினைக்க நினைக்க அவளுக்குள் குலை கொதித்தது. மனசெல்லாம் கிடந்து கசந்தது. அவமானத்தில் கூசிப் போகிற நினைவு.

'ச்சேய்... நம்மளை எம்புட்டு ஏளனமா இழிவா - நெனைச்சுட்டான்! ஏழையைக் கண்டா, மோழை (கொம்பில்லா மாடு)யும் பாயும்ங்கிறது சரியாய்ப் போச்சே. எளியவன் பொண்டாட்



**"ஜுராசிக் பார்க் டினோசாருக்கும் அனகோண்டா மலைப் பாம்புக்கும் சண்டை வந்தா எது ஜெயிக்கும்னு கேட்டா, தெரியாதுங்கறியே... நீயெல்லாம் எதுக்குத் தாத்தா இங்கிலீஸ் படம் பார்க்கறே?"**

**— உ. ராஜாஜி**

---

டின்னா... எல்லாருக்கும் மதினி முறையா? அப்படி. ஒரு சின்னப்பய நினைக்குற அளவுக்கா... நா நடந்துக்கிட்டேன்? இருக்குற லட்சணத்தை குலுக்கி மினுக்கிக்கிட்டா... திரிஞ்சேன்?'

வேப்பமரப் பாதையில், தான் நடந்து போய் வந்த நினைவுச் சுவடுகள். கடைக்கு.. ஓடைக்கு.. தண்ணீர் எடுக்க.. எல்லாம் அந்தப் பாதைதான்.

அப்போதெல்லாம்.. வேப்பமரத் திண்ணையில் அந்தக் கொரங்கு உட்கார்ந்திருக்கும். பல்லையிளித்துக் கொண்டு... கண்ணில் காம எச்சில் வழிய... கழுத்துக்கு மேல் ஓநாய்த் தலையோடு... உட்கார்ந்திருக்கும். உற்று உற்றுப் பார்க்கும். கண்ணால் துரத்தும். எத்தனையோ தடவைகள் இவளது உள்ளுணர்வில் உறுத்திய பார்வைகள்.

'இது என்னடா... இச்சிலாத்தி' என்று மனசுக்குள் சள்ளைப்பட்டிருக்கிறாள்.

வேப்பமரப் பாதையில்லாமல் வேறு பாதையிருக்கத்தான் செய்கிறது. மேலத் தெரு வழியாகப் போகலாம். ஆனால், அங்கே ஒரு சிக்கல். இவளுக்குப் பகையான ஒரு சின்னச் சிறுக்கியின் வீடு, அந்தப் பாதையில்.

'அந்தச் சனியன் மூஞ்சியில் முழிக்கக் கூடாதே' என்ற வெறுப்பில்தான் வேப்பமரப் பாதை. இங்கே... இந்த முன். இந்தச் சனியன். புதுப் பணக்காரனின் வாய்க் கொழுப்பு.

மனசுக்குள் -

அந்த ஓநாயின் மூஞ்சி. கறுத்தமூஞ்சி. மேல் உதட்டுக்கு மேல் மீசை ஓரத்தில் ஒரு மச்சம். கண்ணை உறுத்துகிற மச்சம். தொண்டையில் ஒரு கறுப்பு நரம்பு புடைத்து நெளிந்து இறங்கும். பனியன் போடாத நேரங்களில் நெஞ்சுக் குழியில் ரோம அடர்த்தி. பனியன் போட்டிருந்த தோலின் நிறமாற்ற அடையாளம்.

'ச்சேய்... அந்த ஓநாய் மூஞ்சிக்கு இப்படி ஒரு சபலமா? எச்சில் வடிப்பா?'

இந்தக் கணத்தில் -

அவள் மனசின் ஆழத்தில் ஒரு பெருமித உணர்வு முகம் காட்டுவதை அவளே உணர்ந்து வியந்தாள்.

இப்படி ஓர் சனப் பார்வையை ஈர்த்து விட்ட அழகின் - இளமையின் மீது அவளுக்கே ஒரு கர்வமா? தற்பெருமையா? அல்லது வேல்ராஜ் தந்த அஞ்சு வருஷ ருசியா? ருசி கண்ட பூனையின் கள்ளத்தனம், தன் மனசிற்குள்ளும் பம்மிக் கிடக்கிறதா? நெளிகிறதா?

நானும் எங்கோ... ஒரு மூலையில் சலனப் பட்டிருக்கேனா? சபலப்பட்டிருக்கேனா? சதைத் திரட்சியின் மோகப் பேயின் ராட்சஸத்துக்குப் பலியாகியிருக்கேனா?

அவனது மேல் உதட்டு மச்சத்தைக் கண்டுணர்கிற அளவுக்கு நானும் உற்றுப் பார்த்திருக்கேனா?

அப்ப... மேலத் தெருப் பாதையை நான் தவிர்த்ததன் காரணமே.. பொய்யா? அந்தப் 'பகையாளியின் முகரையைப் பார்க்கக் கூடாது' என்பது, நானே எனக்குச் சொல்லிக் கொண்ட சாக்குப் போக்குதானா? மாய்மாலம் தானா? 'வேறு வழியில்லாமல் வேப்பமரப் பாதையில் போய் வந்தேன்' என்பதுவும் பொய்யா? உள்மனச் சலனத்தால்தான் வேப்பமரப் பாதையா? விரும்பிச் செல்கிற மோகப் பாதையா? பாவப் பாதையா?

விலகி நின்று அவளை அவளே பார்த்துக் கொள்கிற போது... தனது அந்தரங்கத்தைத் தானே உற்று நோக்கிய கணத்தில் -

தனக்குத்தானே மலமாய் - அருவருப்பாய் - அசூயையாய்...

'ச்சேய்ய்' என்று வந்தது. காறித்துப்பணும் போல மனசுக்குள் ஓர் உன்மத்தம். யார் மீது? அவன் மீதா? தன் மீதேதானா?

வெறி கொண்டவள் போல எழுந்தாள், விஜயம். உலர்ந்த சோற்றை... கழு நீர்ப்பானையில் கொட்டினாள். சம்பந்தமற்ற அந்த இளமதியத்தில் பச்சைத் தண்ணீரில் குளித்தாள். சிலீர் என்று பரவிப்படர்ந்த நீர்க் குளிர்ச்சி. மனத்தகிப்பு. 'திகு திகு' வென்று பற்றி எரிகிற உணர்வுத் தீ.

வேறு சேலையை உடுத்திக் கொண்டாள். ஈரக் கூந்தல் முதுகு பூராவிலும் பரவிப்படர்ந்து தொங்க... வேக வேகமாக நடந்தாள், ரௌத்ர கன்னியாக.

வேப்பமரப் பாதையில்தான் நடந்தாள்.

வேப்பமரத்திண்ணை. அவன் இல்லை.

இல்லாமற்போனாலும்... அவன் இருக்கும் திசை பார்த்து, காறித்துப்பினாள். "த்த்தூ ஊஊஊ..."

காறித்துப்பிவிட்டு வீடு திரும்புகிறபோது, அவள் மனசு வைராக்யமாய்ச் சொல்லிக் கொண்டது.

"வேப்பமரப் பாதையிலே நடக்குறது, இது தான் கடைசித் தடவை..."

# KALKI SHOPPING PAGE

வையவன்

# கண்ணீராகி நிலவினில் ஆடி...

**சே,** என்ன அநியாயமான மரணம்!

யார் இதற்குப் பொறுப்பு? பிடித்த மீன் விற்கவில்லையென்று சமைத்துச் சாப்பிட்ட மீனாட்சியா? அவளது நிர்க்கதியா?

மீன்களுக்கு நஞ்சை ஊட்டி வளர்க்கும் தோல் தொழிற்சாலைகளா?

ஈவிரக்கமற்ற லாப வேட்டை ஒன்றை மட்டுமே குறிக்கோளாய்க் கொண்டு அலையும் சமுதாய அமைப்பா?

போன் செய்தி கிடைத்த மறு நிமிஷமே ஒரு போராட்டத் தொண்டருக்கு ஆளனுப்பி அவர் துணையோடு நெடுஞ்சாலைக்கு வந்து ஒரு நைட் சர்வீஸ் பஸ்ஸில் பயணம் செய்யும் போது துக்கத்தை மீறிக் கொண்டு நர்மதாவின் சிந்தனையில் கேள்விகள் குமுறி எழுந்தன.

விடியற்காலைவரை ஆஸ்பத்திரி சம்பிரதாயங்கள் முடியக் காத்திருக்க வேண்டியதாயிற்று.

ஒரு தனி வேன் பேசி மீனாட்சியின் தாய் அஞ்சலை, அவள் அண்ணன் சிவராஜ், மோஹன்ராஜ் ஆகியோருடன் மீனாட்சியின் உடலை திருக்கூடலூருக்குக் கொண்டு வரும் போதும் அந்தக் கேள்விகள் நர்மதாவுக்குள் தீப்பற்றி எரிந்தன.

வழியெல்லாம் அவர்கள் கதறுவதைப் பார்த்து மனசு சல்லடையாயிற்று.

அவ்வப்போது கண்ணீர்த் துளிகள் விம்மின. துடைத்தாள். கதற இயலவில்லை.

முடியும்? மோதி முரண்பட்டு எதிர்த்து இணக்கமுற்று ஒரு மையப்புள்ளியில் ஒளி கண்டு பெற்று வழங்கி... அடடா இனி யாரோடு இந்த மனம் வளரும்... இப்படி யாரை வளர்க்கும்?

இவள் பள்ளித் தோழியா... பால்ய சிநேகிதியா? இந்த உறவுக்கு என்ன பெயர்? எந்தப் பெயரும் பொருந்தாது. இவள் என்னென்ன ஜன்னல்களையெல்லாம் திறந்து வைத்தாள்!

வாழ்வின் எளிய தாழ்வாரங்கள் இவளால் தானே அறிமுகமாயின!

வறுமை எது? துக்கம் எது? இந்த மண்ணின் வாசனை எது? இந்த மனித வாழ்வின் விளிம்பு எது? எட்டிப் பிடிக்க வேண்டிய தொடுவானம் எது?

மீனாட்சி அதையெல்லாம் சுட்டிக் காட்டியிருக்கிறாள். குறைந்த வார்த்தைகளில். எளிமையான லகுவில்.

தான் எதை இழந்து விட்டோம் என்று யாரிடம் சொல்வது? சொன்னாலும் புரியுமா?

**மீ**னாட்சியின் சவ அடக்க நேரத்தில் பெரிய மாலை ஒன்றை ஏந்தியவாறு பள்ளித் தோழிகள் வந்தார்கள்.

ஒருத்தி நர்மதாவின் தோளை அணைத்தாள். மற்றொருத்தி கையை இறுகப் பற்றினாள்.

அந்தத் தேற்றுதல்கள் கதறு கதறு என்று நர்மதாவின் மனக்கதவை ஓங்கி ஓங்கித் தட்டின.

இல்லை.' மாட்டேன். இது அவ்வளவு எளிமையாகச் செலவழிக்கக் கூடிய இழப்பில்லை. அது மீனாட்சிக்கு உகந்த மரியாதையுமில்லை.

இந்த துக்கம் ஓர்

இவர்களுக்கு ஒரு முக்கிய உறவு தான் சிதைந்தது. ஆனால் தனக்கு?

வெள்ளைத் துணி மூடிய மீனாட்சியின் உடலைப் பார்க்கும்போதெல்லாம் மனசின் ஒரு திசை நிரந்தரமாய் இருண்ட ஒரு சூன்யம்.

இனி யாரிடம் மனம் விட்டு எதை வேண்டுமானாலும் பேச முடியும்? விவாதிக்க

ஆசான். இது எதையோ போதிக்கிறது. எந்த தீபத்தையோ ஏற்றுகிறது. அது வைரமாய் இறுகிவிட்ட வழி வெளிச்சம்.

மீனாட்சி தேறுதல் கூறியவர்களைப் பார்த்து வேதனையாகப் புன்னகை செய்தாள். கண்களிலே தங்கள் நட்பைக் கௌரவித்த



தற்காக ஒரு மௌன நன்றி.

மீனாட்சியின் சவ அடக்கம் முடிந்து இரவு வீடு திரும்பியதும் அவன் யாருடனும் பேச வில்லை.

கிருஷ்ணமாச்சாரிக்கும், மஹாலக்ஷ்மிக்கும் ஏதோ புரிந்தது. அதை மதிக்கத் தோன்றியது. அனுசரணை தங்கள் கடமை என்று உணர்ந் தனர்.

தலை முழுக வீட்டில் நுழையாமல் அவன் பின்பக்கம் சுற்றிக் கொண்டு குளியலறைக்குப் போனான்.

மஹாலக்ஷ்மி அவன் மாற்றிக் கொள்ள வேறு உடைகளைக் கொண்டு

14

வந்து மௌனமாக மூடிய குளிய லறைக் கதவின் மீது போட்டாள்.

குளித்துவிட்டு அவன் வந்த போது "கொஞ்சம் ரசஞ் சாதம் சாப்பிடேன்!" என்றாள்.

"பசிக்கலே."

"மோர் விட்டுக் கரைச்சு ஒரு தம்ளர் கொண்டு வர்றேண்டா... வெறும் வயத்தோட படுக்கப் படாது."

மஹாலக்ஷ்மி எந்தப் பிணக்குக்கு அப்புறமும் தான் தாய்தான் என்று வெளிப்பட்ட அன்பிற்கு நர்மதா இணங்க வேண்டி வந்தது.

இரவு நர்மதாவின் அறையில் நெடுநேரம் விளக்கு எரிந்தது.

"இன்னும் தூங்கல்லியா நர்மூ?" கிருஷ் ணாமாச்சாரி குரலில் ஒரு தேறுதல் கூறும் நெகிழ்வு.

"தூக்கம் வர்லேப்பா."

அதன்பின் அவர் பேசவில்லை.

மௌனப் பெருமூச்சும் பெருமான் நினைவும் ஒன்றையொன்று தொடர்ந் திருக்கும் என்று நர்மதா புரிந்து கொண்

டான்.

என்னமோ தோன்றியது. எழுந்தாள். ஷெல்ஃபைத் திறந்து அடியிலிருந்த போட்டோ ஆல்பத்தை எடுத்தாள். தாள் தாளாகப் புரட்டினாள்.

ப்ளஸ் டூ தேர்வுக்கு முன் எடுத்த ஸ்கூல் மெமரி என்று அச்சிட்ட ஒரு போட்டோவைப் புரட்டிக் கண்டுபிடித்தாள்.

வகுப்புத் தோழர், தோழியர், ஆசிரியர்களுக்குக் கீழே தரையில் விரித்திருந்த ஜமக்காளத்தில் மீனாட்சி அவள் பக்கத்தில் அமர்ந்திருந்தாள்.

என்ன பெருமிதம் அந்த முகத்தில்! சாம்ராஜ்யம் ஜெயித்த பட்டத்து ராணி போல்.

எதை ஜெயித்தாய் மீனாட்சி? என்னையா? வந்தே தீரும் என்று நீ அறிந்திருந்த மரணத்தையா?

எதற்குப் பிறந்தாய்? கண்டுபிடித்துப் போதுமென்று முடிவு செய்து விட்டாயா?

கண்கள் கலங்கி மங்கின. போதும்! மூடி வைத்து விட்டாள்.

பின்பு ஷெல்ஃபின் கீழ் அறை குடைந்து ஒரு கடிதக் கட்டைத் தேடியெடுத்தாள். ரப்பர் பேண்டை அகற்றி ஒவ்வொரு கடிதமாகப் புரட்டினாள். ஒரு கவர். எடுத்ததுமே புரிந்து விட்டது.

ப்ளஸ் டூ வுக்குப் பின் நர்மதா குரோம்பேட்டை வைஷ்ணவா கல்லூரியில் பி.எஸ்ஸி படிக்கப் போனபோது மீனாட்சி எழுதிய முதல் கடிதம்.

மற்ற கடிதங்களுக்கு ரப்பர் பேண்ட் மாட்டி உள்ளே போட்டுவிட்டு அந்தக் கடிதத்துடன் கட்டிலுக்குத் திரும்பினாள். படிக்கத் தொடங்கினாள்.

அன்புள்ள நர்மதா,

நலமாய் இருப்பாய். நானும் நலம்.

உன் திடீர்ப் பிரிவு என்னை நடுக்காட்டில் நிறுத்திவிட்ட திகைப்பு சூழ்ந்து என்னென்னமோ பிதற்றுகிறேன்.

உனக்குத்தான் பொறுமை அதிகமாயிற்றே! என்னைவிட. சகித்துக் கொள்.

நேற்று 'ஸ்கூல் மெமரி' குரூப் போட்டோவை பார்த்துக் கொண்டிருந்தேன்.

நமது ப்ளஸ் டூ வழியனுப்பு விழா நிகழ்ச்சியில் நான் பாடிய பாரதி பாடலுக்கு நீ என்னை அப்புறம் தோளணைத்துக் கை குலுக்கியது கவனம் வந்தது.

இரண்டு நாள் கழித்து ஏரிக்கரை சுமை தாங்கிக் கல்லில் அமர்ந்து நாம் பேசும்போது மீண்டும் அதைப் பாடச் சொல்லிக் கேட்டாய்.

'தங்கள் பொன்னுடல் இன்புற நீர் விளையாடி இல் போந்ததும் இந்நாடே!' என்ற இடம்

வந்ததும் என் கையைத் தொட்டு நீ நிறுத்தினாய்.

'என்ன மனுஷன்டா அவன்!' என்று நீ பாரதியைப் பற்றிப் பரவசப்பட்டது மறக்க முடியவில்லை.

இந்த மண்ணிலே ஒரு சொந்தம் கொண்டாடி, அந்த அண்டவெளிக் கவிஞன் காலத்தின் மீது ஏறி நின்று பார்த்த அந்த ஞானப் பார்வையை நீ எனக்கு அன்று விளக்கினாய்.

ஆனால், இன்று எனக்குள்ளே வேறு கேள்விகள் தோன்றி விட்டன.

கன்னியர் ஆவதும், நிலவினில் ஆடுவதும் நீர் விளையாடி இல் போவதும் தவிர நமக்கு வேறு கதி இல்லையா?

என் அம்மாவையும் உன் அம்மாவையும் பார்க்கிறேன். இவர்கள் 'மங்கையராய் இல்லறம் நன்கு வளர்த்தார்கள்'தான்.

வீடு வீடு என்று தங்கள் கூட்டின் கதவுகளை மூடி, இவர்களே தங்களைக் கைதிகளாக்கிக் கொண்டார்களோ என்று தோன்றுகிறது!

நர்மதா கடிதத்தின் அந்தப் பகுதியை மீண்டும் ஒருமுறை திரும்பிப் படித்தாள்.

முடிக்கும்போது கரண்ட் ஆஃப் ஆகி அறையில் இருள் நுழைந்தது. ஒரு நிமிடம். இரண்டு... 'கரண்ட்' வருமென்று நம்பிக்கை இல்லை.

கடிதத்தை மடித்து தலையணையின் கீழ் வைத்தாள். எழுந்து போய் ஜன்னலை மறைத்திருந்த ஸ்க்ரீன் துணியை விலக்கினாள்.

ஜன்னல் கம்பிகளுக்கு வெளியே நிலா தெரிந்தது. பௌர்ணமியை எதிர்நோக்கும் பதின்மூன்றாம் நிலா.

கண் கொட்டாமல் அதையே பார்த்தாள். இரண்டு நாளாய்த் தூக்கமில்லாத உடல் களைப்பு. எப்போது கண்ணயர்ந்தோம் என்று தெரியாது தூங்கிப் போனாள்.

மறுநாள் காலை முதல் மேக மூட்டம். மழை எப்போது வேண்டுமானாலும் பெய்யலாம் என்ற வானிலை.

அனந்தாச்சாரியை பெய்லில் அழைத்து வர பேரூராட்சித் தலைவரும் ஊர்ப் பிரமுகர்களும் போயிருப்பதாக கிருஷ்ணா வந்து சொன்னார்.

தானும் போனாலென்ன? உடனே மீனாட்சியின் உடலோடு வேனில் வந்த அனுபவம் ஞாபகம் வந்தது. ம்ஹூம். முடியாது. வேலூர் போனால் தாங்க முடியாது.

நர்மதா சைக்கிள் எடுத்தாள்.

மஹாலட்சுமி திரும்பிப் பார்த்தாள்.

"மீனாட்சி வீடு வரைக்கும் போய்ட்டு வர்றேன்."

"சுருக்கா வந்துரு."

பாதி வழியில் மீனாட்சி வீட்டிற்குப் போனால் காத்திருக்கும் புலம்பலும் வேதனைகளும் நினைவில் தோன்றின.

இப்போது யாராவது தன்னைத் தேற்றினால் தேவலை. தனக்கு யாரைத் தேற்ற சக்தி இருக்கிறது?

ஏன் புறப்பட்டோம்? திரும்பி விடலாமா?

நேற்றிரவு படித்த மீனாட்சியின் கடிதம்.

சைக்கிளில் நர்மதா ஏரிக்கரைக்குப் போனாள்.

வாகனங்கள் மோதாத ஓரத்தில் சைக்கிளை நிறுத்திப் பூட்டினாள். மேடு ஏறி சுமைதாங்கியை நோக்கி நடந்தாள்.

வெறிச்சோடியிருந்தது.

சுமைதாங்கி மீது உட்கார்ந்தாள்.

எதிரே ஏரி. அதன் விசாலப் பரப்பில் சிற்றலைகள் சப்தித்தன.



"வாங்க, வாங்க வாங்க! இப்பத்தான் நாங்க காப்பிப்பொடி, பால், சர்க்கரை விற்கும் விலையில் நண்பர்கள் வீட்டுக்குப் போனால் காப்பியை எதிர்பார்க்கக் கூடாதுன்னு பேசிக்கிட்டிருந்தோம்..."

– மும்பை ஆர்.ஆர்.

மௌனமாக சுற்றிலும் பார்த்தாள். தூரத்தில் ஆடு மேய்க்கும் சிறுமி ஆடுகளை விரட்டும் ஒலி.

மீனாட்சி.... மீனாட்சி

மனசு உள்ளே கூவியது. நிசப்தமாகப் பார்த்துக் கொண்டே இருந்தாள். கால்மணி நேரம் ஆகியிருக்கும்.

யாரோ நடந்து வரும் காலடியோசை.

திடுக்கிட்டுத் திரும்பினாள்.

பத்ரிநாராயணன்.

பனிச்சென்று சிறையில் சந்திக்க வந்த மீனாட்சி சொன்ன தகவல். என்ன ஐரனி! அவள் இல்லை. இவன் வந்திருக்கிறான்.

பத்ரி மெதுவாய் நடந்து வந்து சற்றுத் தள்ளி நின்றான்.

"உங்க ஆத்துக்குப் போயிருந்தேன்!"

அம்மா தெரிவித்திருப்பாளோ?

"வழியிலே ஒங்க சைக்கிள் நன்னா அடையாளம் தெரிஞ்சது. நீங்க ரெண்டு பேரும் இங்கே வர்றதுண்டுன்னு மீனாட்சி

# எப்போது கேட்பது!

காலையில் கேட்டால் -
அலுவலகம் செல்லும் நேரம்;
நேற்றே கேட்பதற்கென்ன?

மாலை அலுவலகத்திலிருந்து
வந்தவுடன் கேட்டால் -
அலுத்துச் சலித்து வீட்டிற்கு வந்தால்
நிம்மதியாக இருக்க முடியாது, சீ!

மாலையில் வேண்டாம்,
சாப்பிடுமுன் கேட்டால் -
சாப்பாட்டு மூடை கெடுத்துவிடு,
அப்புறம் கேட்பதற்கென்ன?

சாப்பிட்டபின் கேட்கலாம் -
அப்போது என் வேலை மும்முரத்தில்
கேட்க முடியாமல்போக...

இரவு படுப்பதற்குமுன் கேட்டால் -
நல்ல மூடை கெடுக்காதே,
அப்புறம் பேசலாம்.

காரியம் முடிந்தபின் -
என்னத்தைக் கேட்பது?
குறட்டை ஒலியைத்தான்!

நான் கேட்க நினைப்பது யாவும்
பல வருடங்களாக
என்னுள்ளேயே புதைந்துவிட்டன
என் உணர்வுகளைப் போல.

— மாயா சேகர்



அன்னிக்குச் சொன்னா."

வயிற்றை எதுவோ பிசைந்தது. அலை ஒன்று புரண்டு நெஞ்சுக்குள் முட்டிற்று. கீழுதட்டைக் கடித்தவாறு அவள் தலை திருப்பிக் கொண்டாள்.

"மிஸ். நர்மதா,"

அவள் திரும்பவில்லை.

அவன் சற்று நேரம் மௌனமாய் நின்றான்.

"எக்ஸ்க்யூஸ் மீ,"

அவன் குரலில் தொனித்த உருக்கம் அவளைத் திரும்ப வைத்தது.

'நீங்க எப்படி ஃபீல்' பண்றேன்னு தெரியறது. இப்படிக் கேக்கறது ஜாஸ்தி. ஆனா கேக்கறேன்... ஒங்க துக்கத்தை நானும் ஷேர் பண்ணிக்கலாமோ?"

அந்த வார்த்தைகளில் உண்மை ஒலித்தது.

"ஐ டோண்ட் நோ... நேக்கு அந்த உரிமை இருக்கான்னு தெரியல்லே."

நர்மதாவின் இமைகள் படபடத்தன.

"மீனாட்சி வாஸ் எனர்ஜடிக். அப்படி ஒரு பெண் ரொம்ப அபூர்வம்."

அவள் பார்வை அவன் மீதிருந்து மிதந்து கடந்து தொடுவானைத் தொட்டது.

தன்னைக் கட்டுப்படுத்த அவள் பற்களைக் கடித்துக் கொண்டாள்.

"நர்மதா..."

அவன் வெகு இயல்பாக நெருங்கி வந்து அவள் தோளைத் தொட்டான். அந்த ஸ்பரிசத்தில் இருந்த நேர்மை அவளை நெகிழச் செய்தது.

"ப்ளீஸ்... ப்ளீஸ்... பி காம்... பீ ரிலாக்ஸ்ட்" என்று ஒரு குழந்தையை மிருதுவாகத் தட்டுவது போல் அவன் விரல்கள் அந்தத் தோளைத் தட்டிக் கொடுத்தன.

அவள் தடுமாறியவாறு எழுந்து நின்றாள்.

"பத்ரி" என்று கேவியவாறே அவன் மார்பில சாய்ந்தாள்.

முதல் தடவையாக அவன் பெயரை எவ்வளவு சுருக்கி ஓர் உரிமையுடன் அழைக்கிறோம் என்று அவளுக்கே வியப்பாக இருந்தது.

அவன் கரம், அவள் தோள் தழுவித் தன் மார்பின் மீது அவள் முகத்தைப் புதைத்துக் கொண்டது.

விம்மலும் கேவலும் கண்ணீர்த் துளிகளுமாக ஐந்து நிமிஷம் நர்மதாவின் முகம் பத்ரியின் மார்பில் குலுங்கியது.

"நர்மதா.... நர்மதா...."

அந்த முகத்தை மார்பிலிருந்து அகற்றித் தன் இருகைகளிலும் ஏந்தினான் பத்ரி.

அவன் விழிகளிலும் ஈரம் படர்ந்திருப்பதை அவள் கவனித்தாள்.

அதன் பின் அரைமணி நேரம் இருவரும் அந்தச் சுமைதாங்கியின் மீது உட்கார்ந்திருந்தனர். தள்ளித் தள்ளி. சிற்றலைகள், நீர்க்கோழிகள், கொக்குக் கூட்டம்.

"ம்ம்...நாழியாச்சு" என்று நர்மதாதான் முதலில் எழுந்தாள்.

(தொடரும்)

**வாலிபம் என்பது கலைகின்ற வேடம் - அதில்**
**வந்தது வரட்டும் என்பவன் பெரும் மூடன்**
**வருமுன் காப்பவன்தான் அறிவாளி - புயல்**
**வருமுன் காப்பவன்தான் அறிவாளி - அது**
**வந்தபின்னே தவிப்பவன்தான் ஏமாளி.**

படம் : பூம்புகார் - மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர்



ஆம்; எய்ட்ஸ் வருமுன் எச்சரிக்கையாய் இருந்து காத்துக் கொள்பவன் தான் அறிவாளி. அது வந்த பின்பு தவிப்பவனோ வாழ்க்கையைப் பறிகொடுத்து விட்ட ஏமாளி.

**விழிப்புடன் இருப்போம்; வருமுன் காப்போம்**




**தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாடு அமைப்பு**
417, பாந்தியன் ரோடு, சென்னை - 600 008.
போன்: 8255467, 8255261, 8254917
ஹாட் லைன் : 8256882, 8256864

Pinnacle/97

# குடை இல்லாமல் வை.கோ. என்ன செய்வார்..?



• பாடும் வீணை!



• இனி தனியில்லை...



• எதிர்காலம் காத்திருக்கு!



• செல்லக் குழந்தை!



• நிழலுண்டு!

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

? *'ஜெயலலிதாவின் நடிப்பையும் கருணாநிதியின் வசனத்தையும் ஏற்றுக் கொள்ள நாங்கள் தயாராக இல்லை' என்று டாக்டர் கிருஷ்ணசாமி எம்.எல்.ஏ. கூறியுள்ளது பற்றி...?*

! டாக்டரின் முரட்டுத்தனமான 'ட்ரீட்மெண்டும்' ஏற்றுக் கொள்ளும்படியாக இல்லை.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? *'இரண்டு - மூன்று போட்டிகளில் நன்றாக ஆடுகிற ஒரு வீரரைப் பத்திரிகைகள் மிகப் பெரிதாய் விமர்சித்து வருவது தவறு...' என்ற டெண்டுல்கரின் கருத்து சரிதானா...?*

! அப்படி ஆடுவதே அபூர்வமாய் இருக்கும்போது அதுதானே செய்தி ஆகிறது! நன்றாக ஆடுபவர்களைப் பாராட்டி, விமர்சித்தால் தொடர்ந்து சிறப்பாக ஆடும் வேகம் அவர்களுக்கு உண்டாகும் என்பது எதிர்பார்ப்பு.

● அ. சங்கரன், பெங்களூர் - 16.

? *கமலுக்கு எந்தவித ஒத்துழைப்பும் தர வேண்டாம் என்று படைப்பாளிகள் தீர்மானம் நிறைவேற்றியிருப்பது உண்மையா? அப்படியெனில் அது நியாயமா?*

! நியாயமேயில்லை. மிகவும் சிறுபிள்ளைத்தனமான தீர்மானம்! நீண்ட நாட்களுக்கு இது நீடிக்க முடியாது. கூடிய சீக்கிரம் பல 'கமல்'கள் இப்படி தனித்து இயங்கத்தான் போகிறார்கள்.

● ப. இராம் முருகன், சிவகங்கை.

? *டினோசார்கள் மனிதனை உண்ணுவதுபோல் மிகைப்படுத்தி எடுக்கப்பட்டுள்ள 'தி லாஸ்ட் வோர்ல்ட்' திரைப்படம் பற்றி...?*

! சயன்ஸ் ஃபிக்ஷன் கதைகள் இன்று மிகையாகத் தோன்றினாலும் எதிர்காலத்தில் உண்மையாக மாறிவிடக்கூடிய சாத்தியக்கூறுகள் மிக அதிகம். அறிவால் பெறும் ஆற்றல்களை மனவளத்தால் பதப்படுத்திக் கொள்ளாவிட்டால் விபரீதங்கள் நடக்கும் என்பதைத்தான் அப்படம் சற்று குரூரமாகக் காட்டியது.

● புளியரை கணேசன், சென்னை - 30.

? *'இளம் புயல்', 'சூர்ய வம்சம்' இயக்குநர் விக்கிரமன் பற்றி...?*

! விக்கிரமனிடம் ஒரு தனித்துவமான ஸ்டைல் இருக்கிறது. எடுத்துக் கொள்கிற கதையைப் பாசாங்கு இல்லாமல், நேரடியாக, விறுவிறுப்பாகச் சொல்லும் திறமை இருக்கிறது. தடம்புரளாமல் இதே பாதையில் தொடர்ந்தால் நீண்ட நாள் நிலைத்திருக்கலாம் - கே. பி. போல.

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.

? குடை இல்லாமல் வை.கோ. என்ன செய்வார்...?

! அதான் ஏற்கெனவே இரட்டை இலை நிழலில் ஒதுங்கிவிட்டாரே!

● ருக்மணி குழந்தைவேல்,
மேட்டுத்திருக்காம்புலியூர்.

? அன்னை தெரசாவின் சொத்துக்கள் மூன்று சேலைகளும், ஒரு வாளியும் மட்டுமே என்று அறியும் போது உங்களுக்கு என்ன சொல்லத் தோன்றுகிறது?

! வழங்கப்படவுள்ள புனிதர் (Saint) பட்டத்துக்கு முற்றிலும் தகுதியானவர் அன்னை.

● பஞ்சவண்ணமகன், கருப்பம்புலம்.

? தான் கடவுளின் செல்லக் குழந்தை என்கிறாரே ஊர்மிளா மடோன்கர்...?

! 'இல்லை; ராம்கோபால் வர்மாவுக்குச் செல்லக் காதலி..' என்கிறது பாலிவுட் வட்டாரம்!

● எல். கோபாலகிருஷ்ணன், வேலூர் – 6.

? சீதாராம் கேசரி குடும்பத்தின் மாதாந்திர செலவு வெறும் 1450 ரூபாய் மட்டும்தானாமே...?

! அதனாலென்னங்க! ஒரு ரூபாய் சம்பளத்தில் உலகத்தையே வளைச்சுப் போட்டவங்களைப் பார்த்த நாடு இது!

● சுபன், சுப்பராயபுரம்.

? ரஜினி த.மா.கா.வில் சேர்ந்தால் தலைமை நாற்காலியை அவரிடம் ஒப்படைத்து விடுவதாக சோ.பா. கூறியிருக்கிறாரே? அப்படியானால் மூப்பனார் கதி...?

! ரஜினி கட்டாயம் அப்படியொரு காரியத்தைச் செய்ய மாட்டார் என்கிற தைரியத்தில்தான் சோ.பா. பேசியிருக்கிறார். இதுகூடவா உங்களுக்குப் புரியலை...?

● அவ்வை கே. சஞ்சீவி பாரதி, கலிங்கியம்.

? அரசுக்கும் பஸ் அதிபர்களுக்கும் இடையே நடந்த பேரமே பஸ் கட்டண உயர்வு என்கிறாரே வை.கோ...?

! வை.கோவிடம் கூட பேரம் பேசப்பட்டதாக பலமான வதந்தி!

● வனிதா, புள்ளம்பாடி அஞ்சல்.

? பஸ் கட்டண உயர்வினால் அடுத்த தேர்தலில் தி.மு.க. வெற்றி பெறாமல் போகும் என்று என் நண்பர்களுக்குள்ளே வாக்குவாதம்... உங்கள் கருத்து என்ன?

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ச. ஆ. கேசவன்,
கு. கழுகாசலபுரம்,
குருமலை அஞ்சல்,
கடம்பூர் வழி - 628 714.

! அது மட்டுமா? ஐந்தாவது ஊதியக் குழுவின் பரிந்துரைகளை மத்திய அரசு ஊழியர்களுக்கு அமுல்படுத்தியிருப்பதால் மாநில அரசு மற்றும் மாநகராட்சி ஊழியர்களும் சம்பள உயர்வை எதிர்பார்ப்பார்கள். செலவை ஈடுசெய்ய புதிய வரிகள் விதிக்க வேண்டியிருக்கும். மக்கள் மேலும் வெறுப்படைந்து, கோபத்தையும் ஏமாற்றத்தையும் தேர்தலின் போது காட்டினால் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? விரலால் பிறக்கும் இசைக்கும் குரலால் பிறக்கும் இசைக்கும் என்ன வித்தியாசம் சார்...?

! செவிகளால் அனுபவிக்கும் போது வாத்திய இசைக்கு வார்த்தைகள் இல்லாதது குறையாகத் தோன்றலாம். ஆனால், நம்மை உணர்வால் அனுபவிக்கச் செய்யும் அளவுக்கு உயர்ந்த இசையை வாத்தியக் கலைஞர்கள் வழங்கும்போது அந்தக் குறையே தோன்றுவதில்லை. உதாரணம் : வீணையைப் பாடவைக்கும் ஜெயந்தி ரெங்.

● என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.

? பக்திக்கும் மரியாதைக்கும் உரியது கோவில் மட்டுமல்ல... நாம் பணிபுரியும் இடமும் கூட என்பதை எத்தனை பேர் பின்பற்றுகிறார்கள்?

! கோவிலில் பணிபுரிகிறவர்களாவது பின்பற்றுவார்கள் என்று பார்த்தால், ஏமாற்றம்தான்!

● ச.ஆ. கேசவன், குருமலை அஞ்சல். ❑

? ஒரு சின்ன சந்தேகம்... அரசியல் அரசியல்வாதிகளைக் காப்பாற்றுகிறதா? அரசியல்வாதிகள் அரசியலைக் காப்பாற்றுகிறார்களா...?

! அரசியல் என்பதே நாட்டுக்காகவும் மக்களைக் காக்கவும் ஏற்பட்டது; தங்களைத் தாங்களே காத்துக் கொள்ள அல்ல... என்பதை அரசியல்வாதிகள் முதலில் புரிந்து கொள்ள வேண்டும். அது நடக்காதவரை அரசியலும் அவர்களைக் காப்பாற்றாது; அவர்களாலும் அரசியலைக் காப்பாற்ற முடியாது!

• தெரியாமலா பேசினார்!





• சிக்கனச் செம்மல்!



• புனிதர்



• முரட்டு ட்ரீட்மெண்ட்!



# நான் வில்லன் அல்ல!

8

நான் சக்தி நாடக சபையிலே சேர்ந்த போது எனக்குச் சம்பளம் முப்பது ரூபா. பத்துப் பதினைஞ்சு வாங்கிய வங்கல்லாம் சேர்ந்து சம்பளத்தை அதிகமாக்கணும்னு கேட்டாங்க. மானேஜிங் டைரக்டர் எங்கிட்ட வந்து 'என்ன செய்யலாம்'னு கேட்டார்.

'அண்ணே! அவங்களுக்கு அதிகமா சம்பளம் போட்டுக் குடுத்தா உங்களுக்கு மரியாதை இருக்கும். அவங்களுக்கு நல்லா அனுபவம் இருக்கு. கொடுக் கலாம். இவங்க வேணாம்னு நீங்க புதுசா ஆளுங் களைப் போட்டா சம்பளம் குறைவா கொடுத்தா போதும். ஆனா மரியாதை இருக்காது' அப்படின்னு நான் சொன்னேன்.

அவரு இல்லாடி. எங்கே நான் மொதல்ல ஜாஸ்தி சம்பளம் கேட்டுடுவேனோன்னுதான் எங்கிட்ட ஆலோசனை கேக்கற மாதிரி கேட்டாருன்னு அப்ப என் புத்திக்கு எட்டல்ல.

என்ன பண்ணார் தெரியுமா! பத்துப்பதினஞ்சி ரூபா சம்பளக் காரனுக்கெல்லாம் ஐம்பத்தஞ்சு, அறுபத்தஞ்சுன்னு ஆக்கினார். எனக்கு முப்பதிலிருந்து நாப்பது ரூபா. பத்து ரூபாதான் அதிகம். இருந்தாலும் பரவாயில்லைன்னு நான் திருப்தி அடைஞ்சேன். ஏன்னா கம்பெனியே கடன் வாங்கித்தான் ஆரம்பிச்சிருக்காங்க, போவட்டும்னு என் சம்பளம் பத்தி நான் எதுவும் பேசல்லே.

இங்கதான் நான் முத்துகிருஷ்ணனைப் பத்தி சொல்லணும்.

ராஜமாணிக்கம் பிள்ளை கம்பெனியில நான் சேர்ந் தப்போவே அவர் எனக்கு ரெண்டு வருஷம் சீனியர்.

நான் போனதுமே என்னைக் கூப்பிட்டார்.

"எதுக்கு இங்கே வந்திருக்கிறே?"

"எதுக்குன்னா, நடிக்கத்தான்."

"கிழிச்சே... நான் ரெண்டு வருஷமா இங்கே இருக்கேன். 'சதி அனுசுயா'வில சிவன் வேஷம்கூடப் போட்டிருக்கேன். எனக்கே இன்னும் சம்பளம் போடலே. நீ எப்ப நடிகனாயி உனக்குச் சம்பளம் போடப் போறாங்க...?"

எப்பவுமே என்னைப் பார்த்தா ஒரு நக்கல்தான் அவருக்கு. சின்னப் பசங்க பெரிய ஆம்பிளையா வளர்ந்து வரப்போ குரல் உடையுமில்லையா! அப்படி அவரோட குரல் மாறிச்சு. தபேலா கத்துக்க ஆரம்பிச்சார். அப்புறமா ராஜமாணிக்கம் கம் பெனியையும் விட்டுட்டார்.

அந்த முத்துகிருஷ்ணன் சக்தி நாடக சபையில பி.ஏ. போல வந்து சேர்ந்தார். தபால் வாங்கறது போறது இதெல்லாம் அவர் இன்சார்ஜ்தான். அவருக்கு பத்து ரூபா சம்பளம். எனக்கு முப்பது ரூபா. சம் பளம் அதிகமா போட் டப்போ அவரோட பத்து, ஐம்பத்தஞ்சி ஆச்சு. என் முப்பது நாப்பது ஆச்சு. அவர் நக்கல் போகல்ல.

"என்ன நம்பியார்.... நீ என்னிக்கும் என் சம்பளத் துக்கு கிட்டவே வர முடியாதில்ல..."

"அடுத்து கம்பெனி கோவைக்குப் போறப்போ சம்பளம் ஏத்துவாங்கன்னு" நான் சொன்னேன்.

"உனக்கு மட்டுமா ஏத்து வாங்க... எனக்கும்தானே"

அதே மாதிரி கோய



முத்தூர்ல பதினைஞ்சு ரூபா அதிகமா கொடுத்தாங்க. அப்ப என்ன ஆச்சு?

அவருக்கு எழுபது ரூபா. எனக்கு ஐம்பத்தஞ்சு. அப்பவும் நான் அவர் சம்பளத்துக்கு நெருங்க முடியலேதான்.

நான் ஏற்கெனவே சொன்னேன் பாருங்க, எங்க கம்பெனியில இருந்து ஓடிப்போனார்னு... எஸ்.எம். சுப்பையா நாயுடு. அவர் அப்ப சென்ட்ரல் ஸ்டுடியோவில இருந்தாரு. ஜூபிடர் பிக்சர்ஸ் அந்த ஸ்டுடியோவை லீஸ் எடுத்து நடத்தி வந்தாங்க.

சுப்பையா நாயுடுவுக்கு, முத்துகிருஷ்ணனைப் பிடிக்கும். ரெண்டு பேரும் நாயுடு. அப்பப்ப அவரை மியூசிக் வாசிக்க கூப்பிட்டுப்பாரு. அதில அவருக்கு மாதம் நூத்திப் பத்து ரூபா கெடச்சிது. கம்பெனி சம்பளம் எழுபது ப்ளஸ் நூத்திப் பத்து. ஆக நூத்தி எண்பது ரூபா. நான் அம்பத்தஞ்சிலேயே நிக்கிறேன்.

ஆனா உள்ளுக்குள்ள 'என்னிக்காவது நாம் சினிமாவில நடிச்சி நல்லா சம்பாதிக்கத்தான் போறோம்'னு எனக்கு நம்பிக்கை மட்டும் ஸ்டார்ங்கா இருந்தது.

திடீர்னு என் காட்டில மழை. ஜூபிடர் பிக்சர்ஸ்ல என்னை 'புக்' பண்ணாங்க. மாசம் அறுநூறு ரூபா சம்பளம். நான் மட்டும் தைரியமா பேரம் பேசியிருந்தா மாசம் ஆயிரம் ரூபா கொடுத்திருப்பாங்க. இல்லேன்னா படத்துக்கு ஐயாயிரம் ரூபா சம்பளம் பேசியிருக்கலாம். எனக்குத்தான் தைரியம் கிடையாதே!

இப்படி நான் ஜம்ப் ஆகி உயரே போனதை முத்துகிருஷ்ணனால் எப்படி பொறுத்துக்க முடியும்? ஏன்னா நாடகக் கம்பெனியை விட்டதும் அந்த எழுபதும் போச்சு. வெறும் நூத்திப் பத்து மட்டும்தான். நான் ஐம்பத்தஞ்சிலிருந்து திடீர்னு அறுநூறுக்குப் போனதை அவரால பொறுத்துக்க முடியல. அவர் நல்லவர்தான். ஆனா ஒரு விசேஷ குணம் என்னன்னா யாரைப் பத்தியாவது எப்பவும் ஏதாவது கோள் சொல்லிக்கிட்டே இருக்கணும். அப்படி யாரும் கிடைக்கலேன்னாலும் அவர் கவலைப் படறதில்ல. தன்னைத் தானே திட்டிப்பார். "டேய் முத்து கிருஷ்ணா ராஸ்கல்... உன்னை செருப்பால அடிக்கணும்டா"... அவரே சொல்லிப்பார். இப்படி ஒரு வியாதி.

ஜூபிடர் பிக்சர்ஸ்ல எனக்கு ஒரு ரூம் குடுத்தாங்க. அப்ப எம்.ஜி.ஆரும் அங்கே இருந்தாரு. அவரோட குமார்னு ஒருத்தர். இப்படி அவங்க குரூப் இன்னொரு ரூம்ல கலகலப்பா இருப்பாங்க. சீட்டுக் கச்சேரி, கேரம்னு அமர்க்களப்படும். 'ஸ்ரீ முருகன்' படத்தில் எம்.ஜி.ஆர் நடிச்சிட்டிருந்த சமயம் அது. நான் அப்படி அவங்க ரூம் பக்கமா போய் கொஞ்ச நேரம் நிப்பேன். அப்புறம் திரும்பிடுவேன். ரொம்ப கலந்துக்கிறதில்ல.

நான் எப்பவும் 'ஹைநெஸ்' ஜிப்பா போட்டுக்கிட்டு ட்ரிம்மா இருப்பேன். அதுவரைக்கும் ஜிப்பான்னா கழுத்து வட்டமாத்தான் இருக்கும். அதுக்கு மேலே கொஞ்சம் உசந்தாப் போல காலர் வச்ச ஜிப்பா வைத்தான் ஹைநெஸ் ஜிப்பான்னு சொல்றது. அந்த 'ஹைநெஸ்' ஸ்டைலை தமிழ்நாட்டுக்கு முதன் முதலா அறிமுகப்படுத்தினவன் நான்தான்னு சொன்னா யாரும் நம்ப மாட்டாங்க. ஆனா உண்மையிலே நான்தான் அந்த மாடலை கொண்டு வந்தவன். திருவாங்கூர் மகாராஜாவோட ஜிப்பா இதே ஸ்டைல்ல இருக்கும். ஹிஸ் ஹைநெஸ் மகாராஜா போட்டதால அது ஹைநெஸ் ஜிப்பா ஆயிட்டுது. அதைப் பாத்துட்டு மகாதேவன்கிற நண்பர் 'நீயும் அப்படியே போடு'ன்னு சொல்ல நான் அதே மாதிரி தச்சேன். இப்பவும் நான் அந்த மாடல்லதான் ஜிப்பா போடுறேன்.

அப்ப அந்த ஏரியாவில நான்தான் பெரிய சம்பளக்காரன். மாசம் அறுநூறு! எம்.ஜி.ஆருக்கு 'ஸ்ரீமுருகன்'ல நடிச்சதுக்கு சம்பளம் மாசம் இருநூறு ரூபாதான்.

உண்மையிலேயே நான் மாசம் இருநூறு ரூபா சம்பளம் கெடச்சா அதுவே பெரிசுன்னு நெனச்சேன். அதுக்குக் காரணம் இருந்தது. அப்ப டி.வி. நாராயணசாமி, பி.எஸ். வீரப்பா ஆகியவங்களுக்கும் இருநூறு ரூபா தான் சம்பளம். அவங்களை வழியில எங்காவது பாத்தா சிறிது



# எம்.என். நம்பியார்

நேரம் பேசுவேன். அப்ப அவங்க 'இருநூறு ரூபா சம்பளத்தில் மாசம் நூறு ரூபா மிச்சமாவுது'ன்னு சொல்வாங்க. உடனே என் கற்பனை இப்படி ஓடும்: "நமக்கும் இருநூறு ரூபா சம்பளம் வந்தா - நூறு ரூபா செலவு, அம்பது ரூபா ஊருக்கு அனுப்பலாம், மீதி அம்பது ரூபா ஸேவிங்... அடேயப்பா!"

ஒருநாள் எம்.ஜி.ஆர் என்கிட்ட சொன்னார். 'நீங்க பெரிய சம்பளக்காரர். அதான் எங்களோட நெருக்கமா பழகாம இருக்கீங்கன்னு நாங்க தப்பா நெனச்சிட்டோம்.

அவங்க ஏன் என்னைத் தப்பா நெனச்சாங்கன்னு எனக்கு 'பளிச்'னு புரிஞ்சு போச்சு.

"முத்துகிருஷ்ணன் என்னைப் பத்தி ஏதாவது தப்பா சொன்னாரா?"ன்னு நான் எம்.ஜி.ஆர்கிட்ட கேட்டேன்.

'அது எப்படி அவ்வளவு கரெக்டா சொல்றீங்க'ன்னார்.

நான் அவரோட காரக்டரை விளக்கிச் சொன்னேன்.

"அவர் ரொம்ப நல்லவர்தான். ஆனா ஒரு சின்ன விஷயம் என்னன்னா அவருக்கு யாரைப் பத்தியாவது கோள் சொல்லிகிட்டே இருக்கணும். அது ஒரு வியாதி. ஆமாம், நீங்க அவருக்கு ஏதாவது பணம் கொடுத்திருப்பீங்களே!"

'அம்பது ரூபா கேட்டார், கொடுத்தேன்'

'சரிதான், அதுக்குதான் அப்படிச் சொல்லி இருக்கார் 'அந்தப் பணத்தைத் திருப்பி அவர்கிட்ட இருந்து வாங்கிடுங்க. அப்பால உங்களைப் பத்தி மத்தவங்ககிட்ட தப்பா பேசுவார்'னு நான் எம்.ஜி.ஆர்.கிட்ட சொன்னேன்.

இந்தக் கட்டுரையில முத்துகிருஷ்ணனை ஏன் நம்பியார் இப்படி போட்டுக் குடுக்கணும்னு படிக்கிற நீங்க எம் மேல கோபப்படலாம். முத்துகிருஷ்ணன் மேல எனக்குக் கோவமில்ல. ஆனா, "மத்தவங்க வளர்ச்சியைப் பார்த்து பொறாமைப் படவே கூடாது.., அப்படிப் படறவங்க முன்னுக்கு வர்றதில்லே"ங்கற பாடத்தை நாம கத்துக்கணும்னுதான் நடந்ததை அப்படியே சொன்னேன்.

**ஹா**ர்மோனியம் வாங்கி வாசிக்கப் பழகி பைத்தியம் போல அந்தப் பொட்டி மேல ஆசை வச்சி, வாசிக்க சான்ஸே கிடைக்காம இருந்தது இல்லியா?

நாகப்பட்டினத்தில மனோகரா நாடகம். எனக்கு வசந்தன் வேஷம். சினிமாவில காக்கா ராதாகிருஷ்ணன் போட்டாரே, அந்த வேஷம்.

நான் முன்னியே சொல்லியிருக்கேன், ராஜமாணிக்கம் ட்ருப்ல ஆக்டர்ஸ்ல கன்னையாவுக்கும் எனக்கும்தான் ஹார்மோனியம் வாசிக்கத் தெரியும்னு.

கன்னையாவும் 'சக்தி'க்கு வந்தாச்சு. மனோகரா நாடகத்தின்போது ஒரு நாள் சக்தி கிருஷ்ணசாமி என்கிட்ட, "நீ ஹார்மோனியம் வாசி. உன் ரோலை சிவானந்தம் போட்டடும்'னு சொன்னார். சிவானந்தம் என்னோட அஸிஸ்டென்ட்டா இருந்தவர். நல்ல நிர்வாகி.

எனக்கு ஏக குஷி. எத்தினி நாள் கனவு! ஆனா ஒரு பிரச்னை.

வாத்தியார் கம்பெனியில இருந்தப்போ அங்கே போட்ட மனோகரா நாடக மெட்டுகள் எனக்குத் தெரியும். அது பழைய மெட்டு. இங்கே சக்தி நாடக சபையில் கே.வி. சீனிவாசன்னு ஒருத்தர், என் நல்ல நண்பர். அவர் என்ன பண்ணார்னா மெட்ராஸ்ல கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன்கிட்ட இருந்து லேட்டஸ்ட் மெட்டுகளை மனோகராவில போட்டு டிராமாவை இன்னும் கலகலப்பா ஆக்கினார். அந்த புதிய மெட்டு எனக்கு தெரியாது. முதல்நாள் வாசிச்சப்போ ஒரே தடவல்தான். ரெண்டாம் நாள்ல இருந்து புது மெட்டையும் பிடிச்சிட்டேன். பதினைந்து நாள் ஆசை தீர வாசிச்சேன். ஜென்ம சாபல்யம் கிடைச்ச மாதிரி சந்தோஷம்.

**'க**வியின் கனவு' நாடகத்தில நான் பயங்கர வில்லன். அந்த நடிப்பைப் பாத்துட்டுதான் ஜுபிடர்ல என்னை 'புக்' பண்ணாங்க. ஆனா சினிமாவில எனக்குக் கொடுத்தது காமெடி ரோல். கலைவாணரும் ஜெயிலுக்கு போயிட்ட சமயத்துல காமெடிக்கு சரியான ஆள் இல்லாம இருந்தது.

எனக்கு நாராயண பாகவதர்னு ஒரு ரோல். டி.ஆர். ராமச்சந்திரன்தான் ஹீரோ. நவமணி தேவிக்கு 'வேம்ப்' ரோல். திருச்சூர் பிரேமாவதி ஹீரோயின். படம் சுமாரா ஓடிச்சி.

## ஸ்டார் வார்ஸ் டிரையாலஜி

**'ஸ்**டார் வார்ஸ்' என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நெடுங்கால ஆங்கிலப் பட ரசிகர்கள் உற்சாகம் அடைய வாய்ப்புண்டு. இருபது வருடங்களுக்கு முன்பு வெளியான முழுநீள விஞ்ஞானப் படம். இதே இயக்குனர் (ஜார்ஜ் லூகாஸ்) இரண்டு தொடர் படங்களையும் வெளியிட்டார்— எம்பயர் ஸ்டிரைக்ஸ் பேக், ரிடர்ன் ஆஃப் ஜேடி- மூன்றையும் இணைத்து 'ட்ரையாலஜி' என்று குறிப்பிட்டதுண்டு.

இந்த மூன்று திரைப்படங்களும் புது அவதாரம் எடுத்து மறுபிரவேசம் செய்திருக்கின்றன. புதிய காப்பி என்பதோடு மேலும் கூர் தீட்டப்பட்ட விஷுவல் எஃபக்டும், நவீன ஒலிப்பதிவின் அறிமுகமும் சேர்ந்து கொள்ள, பழைய மொந்

தையில் புதிய கள்.

ஏழு ஆஸ்கார் விருதுகளைப் பெற்ற ஸ்டார் வார்ஸின் புது வடிவத்தைப் பார்த்தபோது தொழில் நுட்பமும் மனிதத் தனமும் போட்டி போடும் வகையில் உருவாக்கப்பட்ட பல ஹாலிவுட் படங்களுக்கு இது முன்னோடியாக இருப்பது பளிச்சென்று புரிந்தது.



படக்கதை முழுவதும் எங்கெங்கோ தள்ளியிருக்கும் வெவ்வேறு கிரகங்களில் நடப்பவை. ஒரு கிரகத்தின் இளவரசியை வேறொரு கிரகத்தைச் சேர்ந்த வில்லன் கூட்டம் கடத்திக் கொண்டு போய்விட, இரண்டு ஹீரோக்கள், ஒரு சிங்க மனிதன், இரண்டு ரோபோக்கள் அடங்கிய கூட்டம் அவளை மீட்டு வந்து, வில்லன்கள் வசிக்கும் கிரகத்தையே தூள் தூளாக்குகிறார்கள். க்ளைமாக்ஸ் காட்சி, நீ....ண்டது என்றாலும் நிஜமாகவே 'தூள்'தான். இருந்தும் படம் முழுவதும் 'விஞ்ஞான பூர்வமாக' காதில் டன் டன்னாக சுற்றுகிறார்கள் என்கிற எண்ணம் எழுவதைத் தவிர்க்க முடியவில்லை. அதே சமயம் ரசிக்காமலும் இருக்க முடியவில்லை.

— ஜி

'கஞ்சன்! இது நான் நடிச்ச ஒரு படத்தோட பேரு. நான் பாதி ஹீரோ. நரசிம்ம பாரதி பாதி ஹீரோ. அதில நான் வெளியூர்ல இருந்து வருவேன். ஒருபாட்டு பாடுவேன். அந்தப் பாட்டு பட்டி தொட்டியெல்லாம் பாபுலராயி, கிராமபோன் ரிகார்டு பயங்கர ஸேல்ஸ்.

'இந்த உலகில் இருக்கும் மாந்தரில் எழிலுடையோர் எங்கள் தமிழர்'னு பாட்டு ஆரம்பிக்கும். இந்தப் பாட்டை எழுதினது திராவிடர் கழகத்துக்காரர்னு அப்ப பெரிய பேச்சா இருந்தது. அதுல வர்ற வரிகள் ரொம்பத் தீவிரமா இருக்கும். ஆனா உண்மையில அதை எழுதினது ஒரு காங்கிரஸ்காரர். கதர் இயக்கத்தில் இருந்த அய்யாசாமி கவுண்டர்.

அவுட்டோர் போய் கிராமத்து அழகை, நதியின் அழகை, பூவின் அழகையெல்லாம் அப்படியே கொண்டு வந்து நம்மை மயங்க வச்சவர் பாரதிராஜா. இதில எந்த சந்தேகமும் இல்ல. ஆனா அப்போல்லாம் அவுட்டோர் போறதுங்கறது ரொம்ப ரொம்ப கம்மி. எல்லாம் செட் போட்டுதான்.

ராஜகுமாரி படம். எம்.ஜி.ஆர் கதாநாயகனா நடிச்ச முதல் படம். ஷூட்டிங்போது பெரிய வேடிக்கை நடந்தது. நந்தவனம் மாதிரி செட் போட்டிருந்தாங்க. அதில ஒரு மேடை போல போட்டு அதில் எம்.ஜி.ஆர் உட்காரணும். அவரு காலடியில அந்தப் படத்தின் ஹீரோயின் மாலதி உட்கார்ந்து பாட்டுப் பாடற மாதிரி சீன். எல்லாம் ரெடி. ஆனா மாலதி கீழே உட்கார மாட்டேன்னு பிடிவாதம் பிடிச்சாங்க.

"நான் பத்தாயிரம் ரூபா சம்பளக்காரி. ராமச்சந்திரனுக்கு ரெண்டாயிரத்து ஐநூறு ரூபாதான். நான் எப்படி அவரு கால்கிட்ட உட்கார முடியும்? முடியாது."

அதேபோல பாலையா வில்லன். எம்.ஜி.ஆர்.கூட சண்டை போடணும். எம்.ஜி.ஆருக்கு சண்டைக் காட்சிகள்ல இயற்கையாகவே சில நுணுக்கங்கள் ரொம்ப இயல்பா வரும். மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனி நடிகர்கள்கிட்ட இது ஒரு பிளஸ் பாயிண்ட். நல்ல டிரெயினிங் இருந்ததாலே அவங்களுக்கு ரொம்ப உதவியா இருந்தது.

'நான் ராமச்சந்திரன்கிட்ட தோற்க மாட்டேன்' அப்படீன்னாரு பாலையா.

சம்பள ஏற்றத்தாழ்வுதான் காரணம். ஹீரோ புதுசு. டைரக்டருக்கும் அதுதான் முதல் படம். இப்படித்தான் பண்ணணும்னு ஹீரோயின்கிட்டவோ வில்லன்கிட்டவோ வற்புறுத்தி கண்டிப்பா சொல்ல முடியலே.

தமிழ் சினிமா உலகத்தில இப்படியெல்லாமும் ஒரு காலம் இருந்ததுன்னு நீங்க தெரிஞ்சுக்கணும். அதுக்காகத்தான் இதையெல்லாம் நான் விளக்கமா சொல்றேன்.

அப்பல்லாம் எம்.ஜி.ஆர், 'எம்.ஜி. ராம்சந்த்'ன்னுதான் கையெழுத்துப் போடுவார்! என்ன இது வடநாட்டு பேர் போல இருக்கு. 'கூட ஒரு IRAN சேர்த்துக்குங்க'ன்னு நான்தான் முதல்ல அவர்கிட்ட சொன்னவன். ராமச்சந்திரன்னு வரும். ஆனா அவரு நான் சொன்னதில I ஐ விட்டுட்டு வெறும் RAN மட்டும் சேர்த்து 'ராம்சந்த்ரன்' அப்படீன்னு எழுத ஆரம்பிச்சார்.

அந்த எம்.ஜி. ராம்சந்த், பின்னால ராமச்சந்த்ரனாகி, எம்.ஜி.ஆராகி, புரட்சி நடிகராகி, புரட்சித் தலைவராகி, மக்கள் திலகமாகி, இதயதெய்வமாகி, பொன்மனச் செம்மலாகி பின்னாடி இன்னும் என்னென்னமோ ஆனாரு. ஆனா எனக்கு ரொம்பப் பழக்கம். எம்.ஜி. ராம்சந்த், எம்.ஜி. ராம்சந்த்ரன் இவங்க ரெண்டு பேர்தான்.

(தொடரும்)

# கேமராவும் இசையும்தானே ஹைலைட்ஸ்!

வட்ட மேஜை

✉ தயவு செய்து உங்கள் விமர்சகரை வேறு ஒரு நல்ல தியேட்டரில் 'நேருக்கு நேர்' படத்தைப் பார்க்கச் சொல்லவும். படம் சொதப்பலாயினும் தேவாவின் இசையும், ஆனந்தின் காமிராவும் 'ஹைலைட்ஸ்!' என்பது வேறு ஒரு நல்ல தியேட்டரில் பார்த்தாலாவது விமர்சகருக்குப் புரிகிறதா பார்ப்போம்.
திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

✉ 7.9.97 கல்கி கன்சல்டன்சியில் கூறப்பட்ட காசாக்கப்படாத Dividend chequeகளை நிறுவனங்கள் 7 ஆண்டுகள் வரை நிலுவையில் வைத்தபின் அரசுக்குச் செலுத்திவிடும் என்பது தவறான தகவல். அந்நிறுவனங்கள் உண்மையில் Dividend அறிவிக்கப்பட்டதிலிருந்து 42 நாட்கள் வரை காசாக்கப்படாவிட்டால், 7 நாட்களுக்குள், அதனை "un paid Dividend A/c" ல் வைத்திருக்க வேண்டும். பின்னர் 3 வருடங்கள் கழித்து அவை Govt General Revenue A/cல் சேர்க்கப்படும். ஆனால் உரிமையாளர்கள் தக்க ஆதாரத்துடன் எக்காலத்திலும் பணத்தைப் பெற முடியும்.
சென்னை - 44, பி. ஸ்ரீராமன்.

✉ விஞ்ஞானிகளுக்கே சவாலாக இருந்து வரும் எல்நைனோ, இப்பூ மண்டலத்தை என்ன பாடு படுத்துமோ என்று இப்போதே பீதியில் உறைந்து போனோம்!
கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

✉ 'ரேடியோ மவுசு அவுட்டா?' என்ற விவாதம் 'மோதலாக' இருந்தாலும் விறுவிறுப்புடன் நன்றாக இருந்தது. என்னதான் டீவி. நிகழ்ச்சிகள் மக்களைக் கவர்ந்தாலும் 'சாந்தி' மேடம் சொல்வது போல ரேடியோவுக்கு இன்றும் ஆதரவு உள்ளது உறுதி. டீவியை பார்த்துக் கொண்டே ஒரு வேலையும் செய்ய முடியாது. எந்த நேரத்திலும் காதுக்கு இனிமையான பாட்டோ எந்த ஒரு நிகழ்ச்சியையோ கேட்டுக் கொண்டே நம் அன்றாட வேலைகளை எந்தத் தடையும் இல்லாமல் செய்ய உதவும் ரேடியோவுக்கே எங்கள் ஓட்டு!
திருச்சி -1, உஷா முத்துராமன்.

✉ சுகுமாரனின் 'திருத்தம்' அழகான, பொருள் மிக்க அர்த்தமுள்ள கவிதை. ரசித்துப் படித்தேன்.
கோவை - 14, ஏ.எஸ். இராமசாமி.

✉ 'கல்கியும் பாரதியும் கைகோத்த கலைவிழா' கட்டுரையைப் படிக்கப் படிக்க.. இனிமையான இந்த நிகழ்ச்சியை நேரில் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்ற ஏக்கம் பிறந்தது!
சூரனூர், எஸ். காளிதாஸ்.

✉ சிவகுமார குமாரரின் பேட்டியில் டான்ஸ் கத்துக்கச் சொல்லி ரசிகர் கடிதம் எழுதியிருக்கிறார் என்கிறார். நீரோ முந்தின பக்க விமர்சனத்தில் டான்ஸ் ஆசையை முளையிலேயே கிள்ளி எறியச் சொல்லியிருக்கிறீர். துல்லியமாக டாலி ஆகுதே எப்படி?
தூத்துக்குடி, எஸ். ராமசுப்பிரமணியன்.

✉ இளவல் சூர்யாவின் பேட்டி கண்டேன். நடிப்பு, மனசு, உடம்பு, கிசுகிசு இல்லாமை - இப்படி எல்லா விஷயத்திலும் 'திரையுலக மார்க்கண்டேயனாக' அன்றும், இன்றும் திகழும் தந்தையின் பெயரைக் காப்பாற்றினால் சரி.
தேலூர் மேட்டுக்கடை, சியாமளா ஈஸ்வரன்.

✉ எழுத்துலக வானில் பெயர் சொல்லும் தாரகையாக மின்ன வேண்டும் என்று கனவு கண்டு கொண்டிருக்கும் என்னைப்போன்ற வளரும் இளம் எழுத்தாளர்களுக்கு வா.கு.கி. மிகவும் உற்சாகமளித்தது. இனி என்ன? எழுதிக் குவிக்க வேண்டியதுதான். ஆசிரியரே! தயாராக இருந்து கொள்ளவும்!
ஆரோக்கியபுரம், கே. சுதர்சன்

✉ பி.ஜே.பி. 'மதச் சார்புடைய கட்சி' என்கிற குற்றச்சாட்டிலிருந்து விடுபட்டு மத்தியில் நிலையான ஆட்சி அமைக்க உருப்படியான ஆலோசனையை தலையங்கத்தில் கூறியுள்ளீர்கள். செவிடன் காதில் ஊதிய சங்கு ஆகாமல் இருந்தால் சரி.
சென்னை - 78, வி.எஸ். அனந்தராமன்.

✉ இவ்வுலகில் நாம் வெற்றிபெறத் தேவை உழைப்பு! உழைப்பு! உழைப்புதான் என்பதை எஸ்.பி.காத்ரெஜ் அவர்களின் பேட்டி மூலம் உணர்ந்தேன்..
காப்பரத்தாம்பட்டி, கே. ராஜாதிருவேங்கடம்.




**நிலா வேட்டை**

பா. ராகவன்

எழுதும் புதிய தொடர்கதை

# கல்கி

26.10.97 தீபாவளி
இதழில்தான்
இவையும்
இன்னமும்!

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம் :** (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

செலவு அதிகமா இருக்கும்னாலும் ஜாலியான வாரம் சார். வீட்டுல சந்தோஷம் தாண்டவமாடும். ஆனா, புருஷன் பொஞ்சாதிக்குள்ளார லேசா உரசல் இருக்கும். அதேசமயம், மாமியார் மருமகள் உறவு ஓஹோ! வாரக் கடைசில எதிர்பாராம ஏதாவது நல்ல காரியம் நடக்கலாம். ஸ்கூலுக்குப் போகற பசங்களுக்கு மட்டும் லேசா ஏமாற்றம் தரக்கூடிய விஷயங்கள் நடக்கலாம்!



**ரிஷபம் :** (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய)

செவ்வாய், புதன் ரெண்டு நாளும் அலைச்சல். அனாவசிய செலவு இருக்கும். வியாழன்லேருந்து நிலைமை சீராயிடும். எடுத்த காரியம் யாவிலும் வெற்றின்னா பார்த்துக்கங்க. பெண்களுக்கு நகை, நட்டு சேரும். ஆபீஸ்ல நல்ல பேரு, புகழ். தெய்வ வழிபாடு இந்த வாரம் ரொம்ப முக்கியம். ஏன்னா, என்னதான் நல்ல பலனா நடந்தாலும் மனசுல ஒரு குறை அல்லது நெருடல் இருந்துட்டே இருக்கும். அதைத் தீர்த்துக்கத்தான் இது!



**மிதுனம் :** (மிருகசீரிஷம் 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3ம் பாதம் வரை)

நல்லதும் கெட்டதும் கலந்த வாரம் சார். வீடு, மனை வாங்கக் கூடிய யோகம் ஒரு பக்கம்னா, பலதரப்பிலேருந்து தொந்தரவும் இருந்துட்டே இருக்கும். குறிப்பா தொழிலதிபர்களுக்கும் அரசியல்வாதிகளுக்கும் பணத் தட்டுப்பாடு இருக்காது. ஆனா, நிதானம் இல்லாம ஏதாச்சும் ஏடாகூடமா செஞ்சி மாட்டிப்பீங்க. ரேஸ், லாட்டரின்னு குறுக்கு வழில சம்பாதிக்க நினைச்சீங்கன்னா, இந்த வாரம் கட்டாயம் ஊத்திக்கும்!

**கடகம் :** (புனர்பூசம் 4ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)



அதிர்ஷ்ட தேவதை, கொஞ்ச நாளுக்கப்புறம் இப்ப முழுக்க உங்களைக் கண் திறந்து பார்க்க ஆரம்பிச்சிருக்கா. அதனால தாராளமான பணப்புழக்கம், பிரமாதமான அறிவாற்றல், பேச்சு சாதுர்யம்னு கலக்கப் போறீங்க. குறிப்பா மியூசிக், சினிமா துறையைச் சேர்ந்தவர்களுக்கு இப்ப நல்ல சான்ஸ் அடிக்கப் போகுது. பெண்களுக்குக் குறிப்பா சொல்லணும் இந்த வாரம் அவங்க வெச்சது தான் சட்டம்!



**சிம்மம் :** (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

டயம் சரியா இல்லைங்க. கொஞ்சம் அடக்கி வாசிக்க வேண்டிய கால கட்டம். எந்தக் காரியமும் இழுத்தடிக்கும், தள்ளிப் போகும். பிரயாணங்களைத் தவிர்க்க முடியாது. அதனால சில அசௌகரியங்கள் நேரலாம். ஷேர் கீர் வாங்காதீங்க. ஒண்ணும் சுகமில்லை. துர்க்கை வழிபாடு மட்டும்தான் இந்த வாரம் உங்களைக் காப்பாத்தக்கூடிய ஒரே ஸோர்ஸ்.



**கன்னி :** (உத்திரம் 2ம் பாதம் முதல் அஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய)

ஏதாச்சும் கேஸ், கோர்ட்டுல இழுத்தடிச்சிட்டிருந்திச்சன்னா, இந்த வாரம் நல்லபடியா முடிஞ்சிடும். எல்லாமே அப்படித்தான்! எதுவுமே பிராணனை வாங்காம இப்ப சுமுகமா நடக்கற பீரியட் உங்களுக்கு. உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல காலம்! மேலதிகாரிகள் பாராட்டு, அரியர்ஸ் ஏதாச்சும் இருந்தா உடனே வந்து சேர்றதுன்னு சுகமான சம்பவங்கள் நடக்கும். ஆனா உடல் நிலை கவனம்! கொஞ்சம் அலைச்சல் காரணமா உடம்பு கெடும். ஜுரம் அது இதுன்னு எட்டிப் பார்க்கலாம். ஜாக்கிரதையா இருக்கணும். சொந்தக்காரங்க யாராச்சும் உங்க வீட்டுல கேம்ப் அடிக்கலாம், இந்த வாரம்.

**துலாம் :** (சித்திரை 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய)



போன வாரத்தை விடக் கொஞ்சம் தேவலாம் சார்! பொருளாதார ரீதியில இப்ப அதிக பிரச்னை இருக்காது. தவிர வீட்டுலயும் வெளியிலயும் இதுவரைக்கும் இருந்த எதிர்ப்பு சூழ்நிலை கொஞ்சம் கொஞ்சமா மாறத் தொடங்கிடும். பெண்களுக்கு,

ஆண்களைக் காட்டிலும் கொஞ்சம் நல்லாவே இருக்குது. அடம் புடிச்சி வீடு கிடு வாங்க ஆயத்தமாவீங்க. உங்க முயற்சி பலிக்கும்! என்ன இருந்தாலும் மனசுல எப்பவும் ஒரு குழப்பம் இருந்துட்டே இருக்குமே? அதை மட்டும் தொடச்சி, தூர எறிஞ்சிடுங்க. அப்புறம் பாருங்க, நடக்கறதை!

**விருச்சிகம் :** *(விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*



கலைப்பொருள் சேர்க்கை, ஆடம்பரப் பொருள் சேர்க்கை, நகை சேர்க்கைன்னு இந்த வாரம் பெண்களுக்கு நல்ல வேட்டைதான்! ஆண்களுக்கும் பலன் நல்லாவே இருக்குது. பணம் நிறைய கையில தங்கும். (சம்சாரம் மூலமா கரைஞ்சது போகவும்!) வெளியூர் எதுக்காச்சும் ஜாலி ட்ரிப் அடிக்க நேரிடலாம். ஷேர் மார்க்கட் இப்ப உங்களுக்கு சாதகமா மாறி வருது. விக்க வேண்டியதை சட்டுபுட்டுனு வித்து துட்டு பாருங்க.

**கடக ராசிக்காரரான, கர்நாடக சங்கீதக் கலைஞர் நித்யஸ்ரீயை அதிர்ஷ்ட தேவதை கண் திறந்து பார்க்கிறாள். தன்னோட அறிவாற்றல், சாதுர்யத்தால் ஃபீல்டைக் கலக்கப் போறாங்க! ஆல் தி பெஸ்ட்!**



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



டயம் நல்லா இருக்குங்க. வீட்டுல விசேஷம் எதாச்சும் நடக்கலாம். சொந்தக் காரங்களால எதும் நன்மை உண்டாகலாம். கூடப் பொறந்தவங்களுக்கு ஏற்றம் உண்டு. அதைப் பார்த்து உங்களுக்கு மகிழ்ச்சி! தொழில் - வியாபாரம் பண்ணறவங்களுக்கு லாபம் கூடிவர சமயம் இது. ஃபாரின் சான்ஸ் எதாச்சும் வந்தா, மறுக்காதீங்க. குறிப்பா கம்ப்யூட்டர் துறைல இருக்கறவங்களுக்கு இந்த வாரம் வெளியூர் - வெளிநாட்டுல ஏதாவது நல்ல ஆஃபர் வரலாம்!

**மகரம் :** *(உத்திராடம் 2ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2ம் பாதம் வரை)*

தன்னம்பிக்கையும் தெய்வ நம்பிக்கையும் ஒரு சேர இருக்கற இந்த ராசிக்காரர்களுக்கு, இந்த வாரம் பிரச்னைன்னு சொல்லிக்கறாப்பல எதுவும் இருக்காது. கொஞ்சம் யோசிச்சி, ஷேர், ஸ்பெகுலேஷன் துறைல புத்திசாலித்தனமா செயல்பட்டாங்கன்னா, சுலபமா வெற்றிவாகை சூடலாம். அடிக்கடி டென்ஷனாகி நிதானம் இழக்காதீங்க. மோர் ஓவர், உங்க இரக்க சுபாவத்தைப் பயன்படுத்தி யாராச்சும் மொட்டை அடிக்கப் பார்ப்பாங்க இந்த வாரம். யோசிக்காம வாரிக் குடுத்துட்டு, பின்னால நிதானம் இழந்து கத்தாதீங்க. இந்த ராசிக்காரங்களுக்குக் கல்யாண வயசுல தங்கை இருந்து, ரொம்ப நாளா ஒன்றும் படியாம இருந்திச்சின்னா, இந்த வாரம் வரன் மாட்டிடும். கூடிய சீக்கிரமே டும் டும்!



**கும்பம் :** *(அவிட்டம் 3ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ம் பாதம் முடிய)*



நிதானமா இருங்க. மொத மூணு நாள் கொஞ்சம் சரியா இல்லாட்டியும் வெள்ளிக்கிழமைக்கப்புறம் நிலைமை உங்களுக்கு சாதகமா திரும்புது. கணவன்-மனைவி உறவு நிலை நல்லா இருக்கும். குட்டி மனஸ்தாபங்கள் கூட இருக்காது. ஆனா பெண்களுக்குக் கொஞ்சம் உடம்பு சரியில்லாமல் போயி, வீட்டுக்காரங்களுக்கு லேசா மனக் கஷ்டம் இருக்கலாம். அப்புறம் பேச்சை வளர்க்காதீங்க. எங்கேயும், எப்போதும்! மௌனம் கலக நாஸ்தி. இதை எப்பவும் ஞாபகம் வெச்சிக்கங்க.

**மீனம் :** *(பூரட்டாதி 4ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*



உங்க வாய்ஜாலமும் சுலபத்துல யாரையும் நண்பராக்கிக்கற திறமையும்தான் இந்த வாரம் உங்களை ஓஹோன்னு வைக்கப் போவுது. ஆன்மீகம், பக்தி மார்க்கத்துல மனசு லயிக்கும். கோயில், கோயிலா போலாமான்னு தோணும். போயிட்டு வாங்க. குடும்பத்து ஒற்றுமை, மகிழ்ச்சிக்குக் குறையில்லை. சுமுகமான வாரம். சந்தோஷமான வாரமும் கூட.

**கொஞ்ச காலமாக, நகர வாழ்க்கையில் ஆர்த்ரைட்டிஸ் என்கிற மூட்டுவலி நோய் மெள்ள மெள்ளப் பலரையும் தாக்கி வருகிறது. இந்த மூட்டுவலி ஏன் வருகிறது? எப்படி வருகிறது? குணப்படுத்த முடியாதா? போன்ற நமது கேள்விகளுக்கு, கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் சுப்பிரமணியன், மற்றும் சென்னை மருத்துவக் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் சித. அழகப்பன் ஆகியோர் பதிலளித்தார்கள்!**

# மூட்டு வலிக்கு என்ன காரணம்?

● **டாக்டர், ஆர்த்ரைட்டிஸ் என்றால் என்ன?**

ஆர்த்தரைட்டிஸ் என்றால் மூட்டு வலி மற்றும் மூட்டில் வீக்கம்.

● **மூட்டு என்றால்?**

இரண்டு அல்லது மூன்று எலும்புகள் சேரும் இடம்தான் மூட்டு.

● **மூட்டுகள் எப்படி இயங்குகின்றன?**

ஒவ்வோர் எலும்பின் இறுதியிலும் ஒரு மெலிதான, ரப்பர் போன்ற, மீள்சக்தி கொண்ட கார்ட்டிலெஜ் இருக்கிறது. இது ஷாக் அப் சார்பர் மாதிரி, அதிர்ச்சிகளை ஏற்றுக் கொள்ளுகிறது. எலும்புகள் ஒன்றோடு ஒன்று உராய்ந்து கொண்டு சேதம் அடைவதைத் தவிர்க்கிறது. சைனோவியல் சவ்வு என்றழைக்கப்படும் திசுவினால், இந்த மூட்டுகள் இயல்பாக இயங்குகின்றன. சைனோவியல் சவ்வு, சைனோவியல் திரவத்தைச் சுரக்கிறது. இந்தத் திரவம் மூட்டு இணைப்பை இயங்கச் செய்து, அதற்கு மென்மையான அசைவைத் தருகிறது.

● **ஆர்த்ரைட்டிஸ் எப்போது உண்டாகிறது?**

மூட்டிலுள்ள அமைப்புகள் வீக்கம் அடையும் போது ஆர்த்ரைட்டிஸ் தாக்குகிறது.

● **அப்படி வீக்கம் அடைய என்ன காரணம்?**

மூட்டிலுள்ள சுரப்பியில் நீர் அதிகம் சுரந்து, மூட்டு வீங்குகிறது. மூட்டு வீங்கிய பிறகு, திரவம் அதிகமாக ஆன பிறகு, அந்தப் பகுதியே வீங்கி விடுகிறது.

● **ஆஸ்டோ ஆர்த்ரைட்டிஸ் என்கிறார்களே, அது என்ன?**

ஆஸ்டோ ஆர்த்ரைட்டிஸ் என்பதும் மூட்டு வலிதான். ஆஸ்டோ என்றால் எலும்பு. ஆர்த்ரைட்டிஸ் என்றால் மூட்டு வீக்கம்.

● **ஆர்த்ரைட்டிஸ் தாக்கியதும் என்ன ஆகிறது?**

ஆர்த்தரைட்டிஸ் நோய் வந்ததும், மூட்டில் உண்டாகும் முதல் மாற்றம் - கார்ட்டிலெஜ் சவ்வின் மேற்பரப்பு உராய்ந்து, உராய்ந்து தேய்ந்து போகிறது. கார்ட்டிலெஜ், அதன் மீள்சக்தியை இழக்கிறது. அழற்சியினால் வெகு எளிதாகச் சேதமடைகிறது. நாள் போக்கில், கார்ட்டிலெஜ் சவ்வின் பெரும்பகுதி முழுமையாகத் தளர்ந்து போய், எலும்புகளின் முனைகளைப் பாதுகாப்பு எதுவும் இல்லாத அளவுக்குச் செய்து விடுகிறது. இயல்பாக அசையும் மேற்பரப்பு இல்லாது போவதால், மூட்டுகளின் அசைவு வலியைத் தருகிறது. கார்ட்டிலெஜ் சவ்வின் கீழுள்ள எலும்பு இறுகிக் கெட்டியாகி விடுகிறது. மூட்டுகள் அசையும்போது வலியை உண்டாக்குகிறது.

> **நாம் கீழே உட்கார்ந்து எழுந்திருக்கிற மாதிரி, மேற்கத்தியர்கள் செய்வதில்லை. அவர்கள் பெரும்பாலும் நாற்காலியை உபயோகிக்கிறார்கள். அவர்களுக்கு வருவது (ஹிப் ஜாயின்ட்) இடுப்பு எலும்பு பகுதி ஆர்த்ரைட்டிஸ் பாதிப்புத்தான்.**

● **ஆர்த்ரைட்டிஸ் நோய்க்கான காரணம் என்ன?**

இதற்கான காரணம் இன்னும் இதுவரை புலப்படவில்லை. முதுமை காரணமாக எலும்புகள் தேய்ந்து விடும் நிலையும், உடல் பருமனும் இந்நோய்க்கு முதலில் வழி வகுக்கும் காரணங்கள்.

● **பருமன் எப்படிக் காரணமாக**

முடியும்?

உடலின் பளு முழுதும் இந்த மூட்டுகளில்தானே இறங்குகிறது? அதனால்தான்.

● பருமனாக இருப்பவர்களுக்கு, ஆர்த்ரைட்டிஸ் வர மற்றவர்களை விடக் கூடுதலான வாய்ப்புகள் இருக்கிறது என்றால், முதுகில் பாரமும் மூட்டையும் சுமப்பவர்கள் நிறையப் பேருக்கு ஆர்த்ரைட்டிஸ் வர வேண்டுமே?

அவர்கள் நாள் முழுக்கச் சுமப்பது இல்லையே? விட்டு விட்டுச் சுமை தூக்குவதற்கும், ஒரு நொடி இடைவேளை இல்லாமல் உடலின் முழுப் பாரத்தையும் முழங்கால்கள் தாங்க வேண்டியிருக்கிற நிலைமையையும் நினைத்துப் பாருங்கள். அப்போது புரியும். இரண்டாவதாக, பருமனாக இருப்பவர்களின் தசைநார்கள் பெரும்பாலும் உறுதியாக இல்லாததால்தான் ஆர்த்ரைட்டிஸ் தாக்குகிறது. அதே சமயம், பாரம் சுமப்பவர்களின் தசைநார்கள் உறுதியாக, வலுவாக இருக்கிறது.

● வேலை அதிகம் செய்யாமலே, நவீன வாழ்க்கையில், வீட்டுப் பெண்களுக்கு எப்படி எலும்பு தேயும்?

எந்த உறுப்புமே வய



தானதற்கு அறிகுறியாகத் தேயும். முடி நரைக்கிறது. கண் மங்குகிறது. சைவ உணவோ, அசைவ உணவோ எது சாப்பிட்டாலும் பல் தேய்கிறது. அது போலத்தான் எலும்பும். பயிற்சிகள் செய்து, உறுதியான தசைகள் இருந்தால், வயதான பிறகு ஏற்படக்கூடிய தேய்மான விளைவுகளை, அதிக சிரமம் இல்லாமல் சமாளிக்கலாம்.

● **கிராமங்களில் ஓயாமல் ஓடியாடி உழைக்கிறார்களே, அவர்களுக்கு எலும்பு தேய்ந்து ஆர்த்ரைட்டிஸ் பாதிப்பு வருவதில்லையே?**

கிராமங்களில் இல்லாமல் இல்லை. அதிகம் தெரிவதில்லை, அவ்வளவுதான். நகர வாழ்க்கையில் பாதிப்புகள் எதுவும் இல்லாமல், அவர்கள் இயற்கையாகவே உடல் உறுதியாக இருப்பதால், அவர்களில் ஆர்த்ரைட்டிஸ் நோயாளிகள் குறைவு. அதுவுமல்லாமல், அவர்களது தசை நார்கள் உறுதியாக இருக்கின்றன. போர்ட்டர்களை எடுத்துக் கொள்ளுங்கள். அத்தனை பாரத்தையும் அவர்கள் தலையில் சுமப்பதால், சாதாரணமாக அவர்கள் கழுத்துக்களில் ஸ்பான்டிலைடிஸ் வர வேண்டும், இல்லையா? ஆனால் அவர்களின் தலைப் பாரத்தைத் தாங்குவது உறுதியான கழுத்துத் தசைகள். ஜாயின்ட்டுகள் அல்ல.

● **ஆர்த்ரைட்டிஸ் நோய்க்கான அறிகுறிகள் என்ன?**

மூட்டு வலி மற்றும், மூட்டு விறைப்பு (stiffness) ஆர்த்ரைட்டிஸ் நோய்க்கான அறிகுறிகள். மாலையில் நடமாட்டம் முடிந்த பின்பு, வலி ஆரம்பிக்கும். காலை வேளைகளில் வலி அவ்வளவாகத் தெரியாது. குறைவாகவே இருக்கும். பிறகு பகலில் மூட்டுக்களின் கூடுதல் அழற்சியினால் வலி மெல்ல மெல்ல அதிகமாகிறது. பொதுவாக, காலையில் மூட்டு விறைப்பு இருக்கும். இது ஒரு பதினைந்து நிமிடங்களுக்கு நீடிக்கும். ஆஸ்டோ ஆர்த்ரைட்டிஸ் நோயுள்ளவர்கள், மூட்டுக்களின் அசைவின் போது, ஒரு மெல்லிய ஓசை உண்டாவதை உணரலாம். மூட்டுகள் வீங்கி, சிவந்து ஒருவித உஷ்ணமான நிலையை உணரலாம்.

● **பெரும்பாலும் உடலிலுள்ள பல பாகங்கள் மீண்டும் மீண்டும் வளரும் தன்மையோடு இருக்கும்போது, கார்ட்டிலெஜ் சவ்வு மட்டும் தேயக் காரணம் என்ன?**

அதன் உபயோகம்தான் (wear & tear) காரணம். உட்கார்ந்து எழுந்திருக்கிறபோது, உடம்பின் கனம் கார்ட்டிலெஜ் சவ்வைப் பாதிக்கிறது. நாம் கீழே உட்கார்ந்து எழுந்திருக்கிற மாதிரி, மேற்கத்தியர்கள் செய்வதில்லை. அவர்கள் பெரும்பாலும் நாற்காலியை உபயோகிக்கிறார்கள். அவர்களுக்கு வருவது (ஹிப் ஜாயின்ட்) இடுப்பு எலும்பு பகுதி ஆர்த்ரைட்டிஸ் பாதிப்புத்தான். நமக்கு முழங்கால் மூட்டு!

● **முழங்காலில் மட்டுமே வர என்ன காரணம்? மூட்டுகள் முழங்கைகளிலும் இருக்கின்றனவே?**

ஆனால் உடலின் எடையை, முழங்கால் மூட்டுகள் தாங்குகிற மாதிரி, முழங்கைகள் செய்வதில்லையே? அதனால்தான்!

● **ஆர்த்ரைட்டிஸ் நோயை எப்படி குணப்படுத்துவது?**

துரதிர்ஷ்டவசமாக, இந்த நோயைக் குணப்படுத்த முடியாது. ஆனால் மருந்துகள், தேகப் பயிற்சி, ஃபிஸியோதெரபி, ஓய்வு என்று எல்லாம் சேர்ந்தால் ஓரளவு வீக்கத்தைக் குறைக்கின்றன. மேற்கொண்டு மூட்டுகள் சேதமாவதையும், அதன் காரணமான ஊனத்தையும் தடுக்கிறது.

● **உடற்பயிற்சி என்றீர்களே, அவை என்னென்ன?**

அவை நோயாளியின் தன்மையைப் பொறுத்து மாறுபடும். பொதுவாக, எல்லாருக்கும் இந்த உடற்பயிற்சிதான் என்று திட்டமாகச் சொல்ல முடியாது. மெதுவான நடை (slow walking) சரி. ஆனால் ஜாகிங், ஓட்டம், எல்லாம் ஆகவே ஆகாது. குறிப்பாக 'ஜெர்க்' ஆகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

சந்திப்பு : **சாருகேசி**

## பாஸ்வான் ரசனை!



மத்திய அமைச்சர் ராம்விலாஸ் பாஸ்வானின் ரசனை வித்தியாசமானது. அவருடைய வரவேற்பறைக்குள் இரண்டு பெரிய பிளாஸ்டிக் நாய் பொம்மைகளுக்கிடையில் புகுந்துதான் நுழைய வேண்டும். அங்கு ஒரு ஊஞ்சலில் இரு செயற்கை முதலைகள் அசைவதைக் காணலாம். வெள்ளி மயில்களின் வண்ணத் (கற்கள் பதித்த) தோகைகளை நாம் ரசித்தபடி சற்று நிமிர்ந்தால் வைக்கோல் திணிக்கப்பட்ட காட்டுப் பூனை பொம்மைகள் கண்களை உருட்டி நம்மைப் பயமுறுத்தக் காணலாம்.

— டெக்கான் ஹெரால்ட்; தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

# KALKI SHOPPING PAGE

# வீரப்பனும் நானும்!

'நக்கீரன்'

சிவசுப்பிரமணியனைச் சுட்டுவிட்டார்களா? ஆயிரம் தேள் கொட்டினாற்போலிருந்தது எனக்கு. ஒருகணம் பேச்சு மூச்சே இல்லை! சுதாரித்துக் கொண்டு ஜீவாவிடம், "என்ன சொல்றீங்க தம்பி! விவரமா சொல்லுங்க" என்றேன் பதைத்தபடி.

அவர் சொன்ன தகவல் இதுதான் :

காட்டு எல்லையில் அதிரடிப் படையின் முகாம் ஒருபுறம் இருக்க, பத்திரிகையாளர்களும் கூட்டமாகக் குழுமியிருந்தனர் என்று சொல்லியிருந்தேன் அல்லவா? ஜீவாவும் சிவாவும் கூட அந்தக் கூட்டத்தில்தான் இருந்தனர்.

அன்று இரவு எல்லோரும் உறங்கிக் கொண்டிருக்க, சிவா மட்டும் விழித்திருந்திருக்கிறார், எப்படி காட்டுக்குள் போவது என்கிற யோசனையுடன்.

திடீரென்று சற்று தூரத்தில் ஒரு பாறையின் பின்னால் மனித நடமாட்டம் தெரியவே, ஜீவாவை எழுப்பிக் கொண்டு அங்கே ஓடினார்.

அது – வீரப்பன்!

அவன் சுட்டுவிடக்கூடுமே என்கிற அச்சத்தில், "நாங்க நக்கீரன் நிருபர்கள்" என்று கத்திக் கொண்டே இவர்கள் செல்ல, வீரப்பன் அவர்களைக் காட்டுக்குள் அழைத்துப் போயிருக்கிறான். வெகு தொலைவு கூட அல்ல! மெயின் ரோடிலிருந்து சுமார் மூன்று கிலோ மீட்டர் உள்ளே போய் ஓரிடத்தில் அமர்ந்து, பேட்டி கொடுத்திருக்கிறான்!

அப்போதுதான் பேபி வீரப்பனை முதல் முறையாகச் சந்திக்க நேர்ந்தது. சும்மா நின்று கொண்டிருந்த அந்தப் பயங்கர உருவத்தினன், திடீரென்று ஒருபுறம் பாய்ந்தானாம். என்ன ஏது என்று பார்ப்பதற்குள், ஓடிக் கொண்டிருந்த ஓர் உடும்பைப் பிடித்துத் தூக்கி வந்ததைக் கண்டு வெலவெலத்துப் போய் விட்டனர் நிருபர்கள்! உடும்புப் பிடி என்றால் என்ன என்று தெரியும். உடும்பையே ஒருத்தன் பூனைக்குட்டி மாதிரி பிடித்துத் தூக்கி வருகிறானென்றால்?

எதிர்பாராத இந்த அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்குள் இன்னொரு அதிர்ச்சி. இரண்டு போலீஸ் இன்ஃபார்மர்கள் சிவாவையும் ஜீவாவையும் வீரப்பனுடன் பார்த்து விட்டார்கள். உடனே அவர்கள் போலீஸுக்குத் தகவல் தர விரைய, அதைப் பார்த்துவிட்ட வீரப்பன், சிறுத்தை மாதிரி சீறிப் பாய்ந்து அவர்களை விரட்டி, நன்றாக உதைத்து அனுப்பி விட்டுத் திரும்பி வந்து பேட்டியைத் தொடர்ந்தான். அதிகம் பேச முடியவில்லை. பிணைக்



• திருப்பர் சிவசுப்ரமணியனுடன்



• உடும்புடன் பேபி வீரப்பன்

கைதிகளையும் அவன் பார்க்கவிடவில்லை. ஆனால் அவர்கள் நலமாக இருக்கிறார்கள் என்று மட்டும் அறிய முடிந்த சந்தோஷத்தில் இருவரும் திரும்ப ஆரம்பித்திருக்கிறார்கள்.

## கோபால் 4

இதற்குள், வீரப்பன் அடித்து விரட்டின இன்ஃபார்மர்கள் ஊருக்குள் வந்து, போலீஸிடம் தகவல் சொல்லிவிட, போலீஸ் விழித்துக் கொண்டு சிவாவைத் தேடத் தொடங்கியிருக்கிறது.

இருவரும் அந்தியூர் வரை நடந்து வந்து சாலை ஏறவும் இரண்டு புல்லட்டில் காவலர்கள் இருவர் பேசியபடி போனார்களாம் :

“அவனுங்க அந்தியூரை தாண்டியிருக்க முடியாது. எப்படியும் பிடிச்சுடணும்!”

இதைக் கேட்டுவிட்டு, இருவரும் அங்கிருந்த ஒரு டீக்கடையில் பதுங்கினர்.

பிறகு, வழியில் போன டூ வீலர்களில் லிஃப்ட் கேட்டு, இருவரும் ஏறிக் கொண்டு கிளம்பிய நேரத்தில் வேறொரு போலீஸ் ஜீப் எதிரே வந்து விட்டது.

உடனே ஜீவா, பைக்கிலிருந்து தாவி இறங்கி கடையில் பதுங்க, சிவா மட்டும் மாட்டிக் கொண்டார்! நல்லவேளையாக ஃபிலிம் ரோல்கள் ஜீவாவிடமே இருந்ததால் தப்பிக்க முடிந்தது!

“டேய், நீதானே சிவசுப்பிரமணியன்? வீரப்பனைப் பார்த்துட்டுத்தானே வரே? உங்கூட வந்த இன்னொருத்தன் – நீலச்சட்டை போட்டவன் எங்கடா?”

சிவா பதில் சொல்வதற்குள் நல்லவேளையாக அந்தப் பக்கம் 'PRESS' என்று போட்ட கார் வர, சிவா சாதுர்யமாக சக நிருபர்களை நிறுத்தி, அதில் ஏறிக் கொண்டு விட்டார்.

ஆனாலும் போலீஸ்காரர்கள் அந்தக் காரைப் பின்தொடர்ந்து போனதை ஜீவா பார்த்தார். எங்கே, என்ன, எப்படி என்று தெரியாமல், 'போலீஸ் சிவாவை கட்டு விட்டது' என்கிற தகவல் மட்டும் ஜீவாவை எட்டியிருக்கிறது. அதான், பயந்து போய் எனக்கு போன் செய்திருக்கிறார்.

நான் உடனே இந்தியாவிலுள்ள அனைத்து பத்திரிகை அலுவலகங்களுக்கும், உயர் அதிகாரிகளுக்கும் – ஜனாதிபதி வரை தந்தி அடித்தேன். ஒரு நிருபரை போலீஸ் இப்படியா பழிவாங்குவது என்று கேட்டேன். பிரஸ் கவுன்ஸிலிலும் புகார் தந்தேன். ஈரோடு கலெக்டர் பழனியப்பனுக்கும் போன் செய்து பேசினேன். என் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

ஜீவாவிடம், “நீங்க எங்கேருந்து பேசறீங்க?” என்று கேட்டபோது ஈரோடு வந்து விட்டதாகச் சொல்லியிருந்தார். அவரை பத்திரமாக



ஈரோடு ஏஜெண்டுடன் இருக்கும்படி சொல்லி விட்டு, அடுத்த கட்ட நடவடிக் கைக்காகக் காத்திருந்த போது ஆபீஸில் போன் ஒலித்தது.

"அண்ணே, சிவசுப்பிரமணியன் லைன்ல இருக்காரு!"

ஐயோ! அந்த நிமிஷத்தை நான் எப்படி வர்ணிப்பேன்? போன உயிர் திரும்ப வந்தது போலாகி, போனைப் பிடுங்கி, "ஹலோ, எப்படி இருக்கீங்க? எங்கேருந்து பேசறீங்க?" என்று அலறினேன்!

"நான் நல்லாருக்கேன் அண்ணே. போலீஸ்ல ரொம்ப குடைஞ்சாங்க. நான் போகவேயில்லை; வீரப்பனைப் பார்க்கவே இல்லைன்னு ஒரேடியா அடிச்சிட்டேன். அவங்களுக்கு இப்ப ஜீவா மேலதான் சந்தேகம். நீலச்சட்டையை நோட் பண்ணிருக்காங்க. ஜீவா இப்ப எங்கன்னு தெரியலையே!" என்றார்.

"அவர் பத்திரமா இருக்கார். நீங்க உடனே கிளம்பி ஆபீஸ் வந்துருங்க" என்று சொல்லி விட்டு, மறுபடி ஈரோடு ஏஜெண்டுக்கு போன் செய்து, ஜீவாவின் சட்டையை மாற்றி, டூவீலரில் அவரை கரூர் வரை கொண்டு வந்து விடுமாறு கேட்டுக் கொண்டேன். (பஸ், ரயில் என்றால் ஆபத்தல்லவா? போலீஸ் கண்ணில் பட்டுவிட்டால்!)

கரூர் வந்து அங்கிருந்து பஸ் பிடித்து அவர் சென்னை வந்து சேர, சிவாவும் வந்தபின்தான் நான் மூச்சு விட்டேன்.

முதல் முறையாக பேபியின் படமும் நக்கீரனில் வெளியாக, பேட்டி மிகப் பரபரப் பாகப் பேசப்பட்டது. பிணைக் கைதிகளைப் பார்க்க முடியாவிட்டாலும் அவர்கள் நலமாக இருக்கிறார்கள் என்ற தகவலையாவது முதலில் தந்தது நாங்கள்தான்!

ஒரு வாரமாயிற்று. திடீரென்று ஒருநாள் மாலைப் பத்திரிகைகளில் செய்தி : கடத்தப் பட்ட மூவரையும் கர்நாடக போலீஸ் அதி காரி சங்கர் பிதாரி மீட்டு விட்டதாக! ஆச்சர் யத்துடன் நான் செய்திகளைக் கூர்ந்து கவனிக்க, "நாங்கள்தான் மீட்டோம்!" என்று இங்கே தேவாரம் வேறு மாதிரியாக செய்தி தந்து கொண்டிருந்தார். ஆனால், மீண்டவர் களுடன் சங்கர் பிதாரி வெற்றிப் புன்னகை யுடன் போஸ் கொடுத்த போட்டோக்கள் பத்திரிகைகளில் வந்தன. இருவரில் யார் சொல்வது நிஜம்? குழம்பினேன்.

பின்னால் நான் நேரில் வீரப்பனைப் பார்த்தபோது அவன் என்ன சொன்னான் தெரியுமா?

"போலீஸ் வந்திரிச்சின்னு தெரிஞ்சது.

## வைரமுத்து எந்த வடிவமும் எடுப்பாரா?





'சிறந்த பாடலாசிரியர்' விருது வைரமுத்துவுக்கு. அதை அளிக்க அழைக்கப்பட்ட விஜு சக்ரவர்த்தி, ''ஒரு யானைக்குப் பரிசளிக்க வேண்டிய பொறுப்பை ஒரு பூனைக்குக் கொடுத்திருக்கிறார்கள்'' என்றார். பதிலுக்கு வைரமுத்து ''அவர் யானை என்று என் சக்தியைக் குறிப்பிடவில்லை. என் நிறத்தைக் குறிப்பிட்டிருக்கிறார். விஜுவும் நானும் ஒரே மண்ணைச் சேர்ந்தவர்கள் என்பது எங்கள் நிறத்தைப் பார்த்தாலே தெரிந்து விடுமே'' என்றார்.

'சிறந்த நடிகர்' விருது பெற்ற கமலஹாசன் ''நானும் அதே மண்ணைச் சேர்ந்தவன்தான். என் நிறம் அப்படியா இருக்கிறது?'' என்றவர், பிறகு ''வைரமுத்து மாதிரி புத்திசாலிகளிடம் இப்படி சண்டை போட்டு விட்டுப் போனால்தான் ராத்திரி எனக்கு நிம்மதியாகத் தூக்கம் வரும். தவிர நான் வேறு எதுபற்றி இப்போது பேசினாலும் பிரச்னையாகி விடும்'' என்றார். நடுவில் சம்பந்தமில்லாமல், ''வைரமுத்து ஒரு mouldable man. அவர் எந்த வடிவமும் எடுப்பார்'' என்று கமல் குறிப்பிட்டது எது குறித்து என்பதுதான் புரியவில்லை.

- ரோட்டரி கிளப் - நியூஸ் டுடே நாளிதழ் இணைந்து நடத்திய திரைப்படக் கலைஞர்களுக்கான பரிசளிப்பு விழாவில் கேட்டவர்: கு

INRECO **புதிய வெளியீடு**



# ஸ்ரீ ஸ்ரீநிவாஸ கல்யாணம்

(ஹரிகதை)



**ஸ்ரீ எம்பார்**
**S. விஜயராகவாச்சாரியார்**

2 கேசட்டுகள் - C-600 & C-601
(Double Cassette Album)
விலை ரூ. **70/-**

எமது அடுத்த வெளியீடு :
**ருக்மணி கல்யாணம்**

எல்லா கேசட் கடைகளிலும் கிடைக்கும்
Marketed by : **Inreco Marketing Services**
19, Dr. Ranga Road, Chennai - 4. Ph : 4998090

---



ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் 64-வது ஆசார்யாள் அவர்களின்

# வார்ஷிக ஆராதனை மஹோத்ஸவம்

(ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் பராத்பர குரு)

**2.11.1997 ஞாயிற்றுக்கிழமை**

**வடகோடி பிருந்தாவனம், கும்பகோணம் - 612 001**

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை அலங்கரித்த 64-வது ஆச்சார்யாளான ஸ்ரீசந்திரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீ சரணர்களின் வார்ஷிக ஆராதனை இவ்வருஷம் கிருத்திகா சுக்ல த்விதீயா (2.11.1997) ஞாயிற்றுக் கிழமையன்று கும்பகோணத்திலுள்ள அன்னாரது அவதார கிருஹத்தில் 32 வேதவித்துக்களைக் கொண்டு நடத்துவதற்கு ஸ்ரீ மஹா சந்நிதானங்கள் அனுக்ரஹித்திருக்கிறார்கள். ஸ்ரீ ஸ்ரீ கிருஷ்ணப்ரேமி மஹராஜ் அவர்களால் **Oct 31, Nov 1 & 2** தினங்களில் பகவத்குணம் & பஜனை நடத்தப்படுகிறது.

இப்புனிதமான ஆராதனையை நடத்த குறைந்தபக்ஷமாக ரூ. 2,50,000/- தேவைப்படுகிறது.

பக்தகோடிகளின் பேருதவியாலேயே செய்யப்படும் இந்த மஹத்தான கைங்கர்யத்தில் எல்லா அன்பர்களும் நேரிடையாக கலந்து கொண்டு எல்லா அம்சங்களிலும் ஒத்துழைத்து திரவ்ய உபகாரம் செய்து இப்புனிதமான ஆராதனையை விமரிசையாக நடத்திக் கொடுத்து ஸ்ரீமஹநீயர்களின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்குப் பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

**T.S.** குருமூர்த்தி, **(Retd. Chief Cashier, UCO Bank) Trustee & Convener, 30/5, K.B. Dasan Rd., Chennai - 600 018.**

"மந்த்ரி ரத்னம்" **A.R.** சேஷய்யா சாஸ்திரி மானேஜிங் டிரஸ்டி. (முன்னாள் ஸ்ரீ காரியம் & ஏஜண்ட் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்)

குறிப்பு: இந்தப் புனிதமான வைபவத்தில் கலந்து கொள்ளும் அன்பர்களுக்கு அந்த மஹநீயர்களின் அருளால் குடும்பத்தில் அமைதி, சந்துஷ்டி, பூர்ணமான லக்ஷ்மி கடாக்ஷம் ஸகலமும் சித்திக்கும்.

நன்கொடையாளர்கள் தங்களது முகவரியை தெளிவாக எழுதினால் ஆராதனைக்குப் பிறகு பிரஸாதம் அனுப்ப அனுகூலமாக இருக்கும்.

நன்கொடைகளை கீழ்க்கண்ட விலாஸத்திற்கு அனுப்ப வேணும். **Cheque / Draft,** வடகோடி பிருந்தாவனம் **Trust A/c Payee** போட்டு அனுப்ப வேண்டுகிறோம்.

குலபதி ஸ்ரீ **K.G.** கிருஷ்ணமூர்த்தி, (Retd. Head Master) **24** டபீர் நடுத்தெரு, கும்பகோணம் 612 001.



சரிதான். உசிரோட பொழச்சிப் போங்கடான்னு நான்தான் கொண்டாந்து உட்டுட்டுப் போனேன். செலவுக்கு ஆளுக்கு ஐயாயிரம் குடுத்தேன்."

(அவன் கேட்டிருந்த மூன்று கோடி ரூபாயில், முதல் தவணையாக மூன்று லட்சம் வாங்கியதாகவும் ஒப்புக் கொண்டான்.)

எனக்குப் புரியாத விஷயம் இதுதான். வீரப்பன் என்கிற கொலைகாரன் தன் கொலைகளை பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறான். தன் நடவடிக்கைகள் எதையும் மறைப் பதில்லை. ஆனால் வருஷக்கணக்காக அவனைப் பிடிக்க முயல்கிற இரு மாநில போலீஸும் ஏன் அடிக்கடி உண் மையை மாற்றி மாற்றிச் சொல்கின்றன? இதில் என்ன ஈகோ வேண்டியிருக்கிறது? எத்தனை கோடி செலவாகிறது! ஏன் நாடகமாகவே எல்லாம் இருக்கிறது? போலீஸ் தரப்பில் தரப்படும் தகவல்கள் முன்னுக்குப்பின் முரணாகவே இருக்கிறபட்சத்தில், நாம் ஏன் வீரப்பனை நேரடியாக மக்களிடம் பேச வைக்கக்கூடாது, டீவி மூலம்?

"அந்த ஜவுளிக் கடைக்காரர் தன்னோட பையன் கல்யாணத்துல ஏதோவொரு புதுமை செஞ்சாராமே? என்ன அது?!"

"ஐநூறு ரூபாய்க்கு மேல மொய் எழுதினவங்க பெயரையெல்லாம் குலுக்கி ஏதோ சிறப்புப் பரிசு கொடுத்தாராம்!"

உடனடியாக சிவசுப்பிரமணியனுக்கு ஒரு வீடியோ கேமரா வாங்கிக் கொடுத்தேன்.

"தம்பி, உங்க வேலை. இனி இதைப் பழகறதுதான். மூணு மாசம் டயம். வீடியோ எடுக்கறதுல நல்லா தேறிடணும்" என்றேன்.

அவரும் அந்தக் கட்டளையை முதல் காரியமாக ஏற்று, வீடியோ நுணுக்கங்களைக் கற்றுத் தேர்ந்தார். வீரப்பனைச் சந்திக்க நாள் குறித்து, கேமராவுடன் காட்டுக்குச் சென்று, சந்தித்துப் பேசி, வெற்றி கரமாகத் திரும்பினார்!

ஒன்பது மணி நேர கேஸட்!

ஆறு வருடங்களாக 132 கொலைகள் செய்து (போலீஸ் ரெக் கார்டுப்படி) இரு மாநில போலீஸாருக்கும் தண்ணி காட்டிக் கொண்டிருப்பவன், தன் குற்றங்களை ஒப்புதல் வாக்குமூல மாக அந்த கேஸட்டில் சொல்லிக் கொண்டிருந்தான்!



அது தொண்ணூற்று ஆறாம் ஆண்டு. பொதுத் தேர்தல் அறிவிக்கப்பட்டிருந்த சமயம். பல தடைகளை மீறி வீரப்பனின் பேட்டி சன் டீவியில் ஒளிபரப்பானபோது, நாடே வியந்து பார்த்தது! தன் குற்றங்களை ஒப்புக் கொண்டதோடு மட்டு மல்லாமல் மரக் கடத்தலில் ஈடுபட்டிருந்த பல பெரும் புள்ளி களையும் அன்று தன் பேட்டியில் அடையாளம் காட்டியிருந் தான்.

அவனது கோபம், ஆக்ரோஷம், ஜெயலலிதா அரசு மேலிருந்த காழ்ப்புணர்வு - இவை மேலேயே மக்கள் கவ னம் படிந்திருக்க, கேஸட்டைப் பார்த்துக் கொண்டிருந்த எனக்கு, அதில் ஒரு செய்தி இருப்பது புலப்பட்டது.

அது - நான் சரணடையத் தயார் என்று மறைமுகமாக வீரப்பன் தன் மனம் திறந்து காட்டியிருந்தது!

"ஏங்க, உங்க கையெல்லாம் இப்படி நடுங்கறது? இப்பத்தான் முதன்முதலா லஞ்சம் கொடுக்கறீங்களா?!"

—பொள்ளாச்சி யமுனா பார்வதி

"ஆனா, என்னை நேர்ல வந்து சந்திக்க உங்கள்ல யாருக்குத் துணிச்சல் இருக்கு?" என்று சவால் விட்டிருந்தான் வீரப்பன்.

இது ஸ்டண்ட் அல்ல! அவனது வாக்குமூலம்! வீரப்பன் வழக்கில் மிகப் பெரிய ஆவணம் அந்த கேஸட்.

நான் முடிவு செய்தேன். அடுத்தமுறை நானே நேரில் போவது அவனைச் சரணடைய வைக்க முயற்சிப்பது.

தமிழகத்தில் ஜெ. ஆட்சி போய், கோட்டைக்குள் கலைஞர் காலடி எடுத்து வைத்திருந்தார்.

நான் காட்டுக்குள் காலடி எடுத்து வைத்தேன்.

(தொடரும்)

# நகரத்தில் ஒரு கிராம வாழ்க்கை

சென்னை நகரின் பரபரப்புக்கிடையே கிராமிய வாழ்க்கை வாழ்ந்து வருகிறது ஒரு குடும்பம். சென்னை - தியாகராய நகரில் வசிக்கும் ஆர். பாலசுப்பிரமணியன் மூன்று வழிகளில் இயற்கையின் வளங்களைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கிறார்.

இரண்டு பசுக்கள். பால் கொடுப்பதோடு இவருடைய குடும்பத்திற்கான கேஸ் தேவையையும் பூர்த்தி செய்கின்றன. ஆமாம், 'பயோகேஸ்' முறைப்படி, இந்தப் பசுக்களின் சாணம் நீரில் கரைக்கப்பட்டு, பெரிய சாண எரிவாயு கலனுக்குள் ஊற்றி விடுகிறார்கள். இந்தக் கலனிலிருந்து வெளிவரும் வாயு, அவர் வீட்டு சமையல் வேலைகளுக்கும் விளக்குகள் எரிவதற்கும் பயனாகின்றன. (மின் செலவும் பெருமளவு மிச்சம்!)

பாலசுப்பிரமணியன் இப்போதே தன் காரை சமையல் எரிவாயுவினால் செலுத்தி வருகிறார். 'பயோ கேஸ்' சிலிண்டர் தயாரிக்கும் முயற்சியிலும் ஈடுபட்டு வருகிறார். சாண எரிவாயுவை சிலிண்டருக்குள் அடைக்கும் தொழில்நுணுக்கம் விரைவில் கைவரப் பெறவிருக்கிறது. பிறகு 'எல்பிஜி' வாயு தேவையில்லை. காருக்கும் பயோ கேஸ்தான்!

இப்படி பயோகேஸ் தயாரிக்கும் முயற்சியில் அவருடைய வயதான தந்தையார் முதல், மனைவி, மற்றும் நாகரிகமாக உடையணிந்த பெண்களும் பையனும் ஈடுபட்டிருக்கிறார்கள்.

கலனில் வாயு பிரிந்த பிறகு அடியில் தங்கும் வண்டல் மிகச் சிறந்த உரமாகிறது. "எங்கள் கிராமத்துக்கு இந்த உரத்தை அனுப்பி அங்கே காய்கறி, பூச்செடிகள், தீவனப் புல் வளர்ச்சிக்குப் பயன்படுத்துகிறேன்" என்கிறார் இவர்.



• சூரிய அடுப்பில் சமையல்

இவருடைய இரண்டாவது முயற்சி மழை நீரைச் சேமிப்பது.

தாம் குடியிருக்கும் வீட்டின் (இரண்டு மாடிக் கட்டடம்) மொட்டை மாடியில் விழும் மழைத் தண்ணீரை ஒரு குழாய் வழியாக முதல் மாடிக்குக் கொண்டு வருகிறார். இங்கே கற்களால் ஆன படுகையில் தண்ணீர் வடிகட்டப்படுகிறது. இந்தப் படுகைக்கும் கீழே உள்ள குழாய் வழியாக வடிகட்டப்பட்ட தண்ணீர், நீர்த் தேக்கத் தொட்டிக்கும் (sump), அது நிரம்பிய பிறகு கிணற்றுக்கும் பாய்கிறது.

"இந்தக் குழாய், வடிகட்டிப் படுகை அமைப்புக்கு அதிகபட்சமாக இரண்டாயிரம் ரூபாய்தான் செலவாகிறது" என்னும் இவர், "இப்படி கிணற்றுக்குள் புகும் மழைத் தண்ணீர் நிலத்தடி நீரின் அளவைக் குறைக்காமல் காக்கிறது. அக்கம்

பக்கத்து வீட்டுக்காரர்களும் செய்தார்களானால் அவர்கள் பகுதியைப் பொறுத்தவரை நிலத்தடி நீர் மட்டும் குறையாமல் காக்கப்படும்; கோடைக்கால அவதியும் தவிர்க்கப்படும்!" என்கிறார்.



• பாலசுப்பிரமணியன் (வலது ஓரம்) : தன் தந்தையார்; மனைவி, குழந்தைகளுடன்.

"அம்மா எங்கேடா?" என்று காலை வேளையில் பையனைப் பார்த்து பாலசுப்பிரமணியன் கேட்டாரானால், "அம்மா மொட்டை மாடியில் சாதம் வடிக்கப் போயிருக்காங்க!" என்று பையன் பதில் சொல்வான்.

• சாணக் கரைப்பில் ஈடுபடும் குழந்தைகள்...

ஆமாம், சூரிய அடுப்பின் மூலம் அரிசி, காய்கறி, தானியங்களை வேகவைத்துக் கொண்டிருப்பார் மனைவி. சுடுதண்ணீர் சூரிய அடுப்பிலிருந்துதான்! "இந்த அடுப்பில் வேகவைக்கப்படும் பொருள்களின் சத்துக்கள் குறையாதது இன்னொரு லாபம்!" என்கிறார்.

'பயோகேஸ்' உற்பத்திக்கு 'அகில இந்திய பெண்கள் கருத்தரங்கம், புது டில்லி'யின் மானியமும் கிடைக்கிறது.

"கிராமம், நகரம் என்று இயற்கை பிரித்துப் பார்ப்பதில்லை. எங்குமே பொதுவாகத்தான் வளம் தருகிறது. நகர மக்கள் நாசூக்கு, அருவருப்பு என்று போலித்தனமாக உணர்வதால்தான் இயற்கை அளிக்கும் வளங்கள் நகரில் வீணாகிறது!" என்று சொல்கிறார் பாலசுப்பிரமணியன்.

- பிரபுசங்கர்




"போன கூட்டத்திற்கு அழைச்சு வந்ததுக்கு இன்னும் கூலி தர்லீங்க."

– சீராப்பள்ளி கு. உதயபாரதி

# பத்தினி

நாயக, நாயகியைப் போலவே கொழுக் மொழுக் கதை. சில காட்சிகளில் 'ஆரோக்கியமான புஷ்டி'யாகவும், சிலவற்றில் 'பொத பொத ஊதல்' எனும்படியாகவும் நகர்கிறது.

கணவன் இறந்ததாக நம்பி இன்னொருவனை நாயகி மணக்க, முதலாமவன் உயிரோடு திரும்புகிறான் (இடைவேளை). அடிக்கடி பணம் கேட்டு மாஜி(?) மனைவியைத் துன்புறுத்தும் அவனை தெய்வம் நின்று கொல்கிறது (சுபம்).

கொஞ்சம் துணிச்சலான கருவைத் தேர்ந்தெடுத்து விட்டாலும் 'சென்டிமென்ட் சிகரம்' இயக்குனர் வாசுவிடம் நிறைய தயக்கங்கள் இருப்பது பளிச்சென்று தெரிகிறது. ஆறு மாதங்கள் பிரகாஷ் ராஜோடு வாழ்க்கை நடத்தினாலும், குஷ்பு கன்னியாகவே இருக்கிறார் (அடுத்த திருமணத்தை நியாயப்படுத்த!). தங்கள் அந்தரங்கத்தை வீடியோவில் பதிவுசெய்து விற்கத் திட்டமிடும் கணவனை 'மந்திரி குமாரி' ஸ்டைலில் மலை மீது அழைத்துச் சென்று விழவைக்கிறாள். (கவனிக்க - 'தமிழ்ப் பண்பாடு' காரணமாகத் தள்ளிவிடவில்லை)! இதனால் தாய்மார்கள் முகம் சுளிப்பார்களே என்ற கிலியிலோ என்னவோ, "நான் உங்களை எனக்காகக் கூடக் கொல்லலீங்க. மத்த பொண்ணுங்களின் வாழ்க்கையை நீங்க நாசமாக்கக் கூடாதேன்னுதான் இப்படிச் செய்தேன்" என்று ஃப்ரீஸ் ஷாட்டில் குஷ்புவைக் கூற வைத்திருக்கிறார்! பின்பு மேடையில் அவர் சீறும்போது கூட 'ஒரு சுகத்தையும் காணாத (அதாவது மணமாகியும் கன்னி) விதவைகளைப் பற்றி உருகுகிறார். மற்ற இளம் விதவைகள்?

குஷ்பு பாத்திரமறிந்து அருமையாக நடித்திருக்கிறார். "டப்பிங் குரலென்றால் தேசிய விருது கிடையாது என்ற விதியைத் தளர்த்தினால் 'பத்தினி' குஷ்புவுக்குத்தான் அந்த விருது" என்று வாசு கூறியதாகச் செய்தி வந்தது. ஆனால் 'ரெகுபதி, வெரும் (வரும்), செல்யாணம்' என்றெல்லாம் உச்சரித்து ஜெயராம் வெறுப்பேற்றும்போது இவருக்கும் ஒரு சுரேந்தர் இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

'வந்தாலே குமட்டுகிறது' என்பது வில்லனுக்கு வெற்றி என்பதால் பிரகாஷ்ராஜின் நடிப்புக்கு ஜே. ஆனால் வளவள வசனங்களின் ஏற்ற இறக்கத்தில் மனிதர் ரொம்பப் படுத்துகிறார்.

'சுகமான பாட்டு ஒண்ணு' ஜேசுதாஸ் குரலில், தேவா இசையில் சுகமளிக்கிறது.

பிரிந்துவிட்ட 'ஒட்டிப் பிறந்த இரட்டையராக' மணிவண்ணனுக்கு டபுள் ஆக்ஷன். ஒருவரை அடித்தால் மற்றவருக்கு வலி. ஒருவர் குடித்தால் மற்றவருக்குத் தள்ளாட்டம். ஸ்கோப் உள்ள நகைச்சுவை. ஆனால் செய்யவில்லை. அவரது தங்கையாக வருபவர் நகைச்சுவை ஃபீல்டில் முன்னேற வாய்ப்பு உண்டு.

"இவ பேசறதுக்கு இந்த அளவு கூட்டம் வந்ததே ரொம்ப ஜாஸ்தி" என்ற (கணவர்) ஜனகராஜின் கமெண்ட்டோடு அறிமுகமாகிறார் லதா! இளமையை முழுமையாகத் தொலைத்து விடாமல் ஜெயராமுக்கு அம்மாவாக வருகிறார். கண்ணிய நடிப்பு.

தொடர் தோல்விகளால் விழுந்து, நிற்க முயற்சி செய்திருக்கும் இயக்குனர், இதில் உட்காரும் லெவலில். அந்தவரை வெற்றிதானே!

- ஜி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement: 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 208/-; Overseas : Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 104/-; Overseas : Rs. 600/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka